# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



மதர் மாதுரி!

KALKI ● 03.01.2010 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்





- வெந்நீர் அபிஷேகப்ரியன்!
- புழுக்கத்தில் புளியஞ்சோலை!
- காவேரியின் கருணை!
- இரண்டாவது தலைநகரமா?

## திருச்சி மாவட்ட ஸ்பெஷல்-1

# மைலாப்பூர் மற்றும் காஞ்சிபுரம்



Sree Annamalaiyar Thunai







# ஸ்ரீ காமாட்சி சில்க்ஸ்®

## காஞ்சிபுரம் பட்டு சேலைகள்

## விழா கால தள்ளுபடி விற்பனை

| | | | | |
|---|---|---|---|---|
| Rs. ~~1350~~ | Rs. ~~1650~~ | Rs. ~~3700~~ | Rs. ~~5800~~ | Rs. ~~8400~~ |
| Rs. 950 | Rs. 1150 | Rs. 1850 | Rs. 2900 | Rs. 4200 |



பழைய காஞ்சிபுரம் பட்டு சேலைகள்
எந்த நிலையிலும் எக்ஸ்சேஞ் செய்யப்படும்

10-50%
தள்ளுபடி

ஞாயிறும்
விற்பனை உண்டு

All Major Credit Cards Accepted

மைலாப்பூர் : எண் 13/7, வடக்குமாட வீதி, கபாலீஸ்வரர் கோயில் அருகில்,
(அம்பிகா அப்பளம் கீழ் தளம்) மைலாப்பூர், சென்னை - 600 004.
போன் : 2461 0444, 2493 3097

காஞ்சிபுரம் : எண் 20, இரயில்வே ரோடு, அருணா தியேட்டர் எதிரில்
காஞ்சிபுரம்-631 501. போன் : 2722 0248

**பெங்களூரில்**
**28.12.2009 To 12.01.2010**
**சௌடையா மெமோரியல் ஹால்**
16வது கிராஸ், காயத்ரி தேவி பார்க் Extn,
வையாலிகாவல், மல்லேஸ்வரம், பெங்களூர்
செல்: 97393 58536

# கல்கி அடுத்த இதழ்...

# திருச்சி ஸ்பெஷல்-2

- ஆக்ஷன் நம்பர்!
- திருப்பட்டூர் நாயகன்!
- மின்னும் Golden Rock
- எங்கே... ஏழைப்பிள்ளையார்?
- மணப்பாறை மாடுகட்டி...
- வீரப்பூர் அருக்காணி
- பிரமாண்ட BHEL

இன்னும்...இன்னும்... இனிப்பான தகவல்களுடன்...

திருச்சி மாவட்டச் செய்திகள்:
கதிர்பாரதி,
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

திருச்சி மாவட்ட ஸ்பெஷல்லைத் தயாரிக்க உதவிய வாசகர்கள் விவரம் அடுத்த இதழில்...

வாசகர்களுக்கு
இனிய புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்!

''சென்ற ஆண்டு நான் இங்கே வந்திருக்கிறேன்; பேசியிருக்கிறேன். அரங்கத்தில் அதிகபட்சம் ஐம்பது, நூறு பேர் இருந்தால் அதிகம். இன்று இங்கே பார்க்கிறேன். கிட்டத்தட்ட 4500 பேர் கூடியிருக்கிறீர்கள். இந்த ஓராண்டுக்குள் நான் அப்படியேதான் இருக்கிறேன். நான் செய்த ஆய்வு அப்படியேதான் இருக்கிறது. நோபல் பரிசு ஒன்றுதான் புதிது. அதனால், இந்த வகை அணுகுமுறை அவசியமா என்று யோசிக்கவேண்டும்'' என்கிறார் நோபல் பரிசு விஞ்ஞானி வெங்கட்ராமன் ராமகிருஷ்ணன். செவ்வாய்க்கிழமை அன்று சென்னை பல்கலைக் கழகத்தில் டாக்டர் ஏ.எல். முதலியார் அடிப்படை அறிவியல் மேம்பாட்டு மையத்தைத் தொடங்கி வைக்க வந்த அவரை, மீடியாவும் மக்களும் சூழ்ந்து கொள்ள திண்டாடிப் போய்விட்டார்.

''சென்னை பல்கலைக்கழகத்தில் இருந்த ஜி.என்.ராமசந்திரனின் கண்டுபிடிப்புகள் மிக முக்கியமானவை'' என்றார் வெங்கட்ராமன். ஒரு ஷோல்டர் பேக், அரைக்கை சட்டை, புன்னகை தவழும் முகம். எல்லாவற்றையும் புதிதாகப் பார்க்கும் பார்வை. புதிதாகக் கேட்டுக்கொள்ளும் குழந்தைத்தனம்.

அதே நேரம் தான் எதையும் தவறாகப் பேசிவிடக்கூடாது என்ற கவனமும் அவரிடம் இருக்கிறது.

கிட்டத்தட்ட முக்கால் மணிநேரம் தான் செய்த ஆராய்ச்சிகளைப் பற்றி அத்தனை விவரங்களையும் மாணவர்கள் முன்னே விரிவாக விளக்கினார். எளிமையான நீரோட்டமான பேச்சு. அறிவியலைத் தெளிவாகக் கற்றவர்களுக்கு அதை எளிமையாகவும் சொல்லத் தெரியும் என்பதைப் புரியவைத்த பேச்சு அது. அதன் பின்னர், மாணவர்களின் கேள்விகளுக்கு அவர் பதில் அளிக்கத் தொடங்கினார்.

**" நோபல் பரிசைக் குறிவைத்து ஆராய்ச்சியில் ஈடுபட முடியாது "**

**நோபல் பரிசு வாங்க என்ன செய்யவேண்டும்?**

''நோபல் பரிசுக்காக ஆராய்ச்சிகள் செய்ய முடியாது. அறிவியலில் அடிப்படை ஆர்வம் இருக்கவேண்டும். எந்தத் துறையில் உங்களுக்கு விருப்பம் இருக்கிறதோ அதில் ஈடுபடவேண்டும். பொறுமையும் நிதானமும் அவசியம். பரிசு கிடைத்தால் கிடைக்கலாம்.''

**உங்கள் ஆராய்ச்சியால் மக்களுக்கு என்ன பலன்?**

''மேன்மேலும் புதிய ஆன்டிபயாடிக்குகளைக் கண்டுபிடிக்க முடியும். ஆனால், பலன் கருதி ஆராய்ச்சிகள் செய்ய முடியாது. இன்றைக்குச் செய்யும் ஆராய்ச்



சிகள் என்றேனும் ஒரு நாள் பலன் தரும் என்ற நம்பிக்கையோடு ஈடுபடவேண்டும்.''

**ஆராய்ச்சி மாணவர்கள் வெளிநாடு போய்த்தான் ஆகவேண்டுமா?**

'' தேவையில்லை. இது என் கருத்து. நான் 19 வயதில் அமெரிக்கா போய்விட்டேன். நான் இதைச் சொன்னால், என்னை ஹிப்போக்ரெட் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், இன்று இந்தியாவில் நிலைமைகள் பெருமளவு மாறியிருப்பதாக நண்பர்கள் சொல்கிறார்கள். இங்கே இருந்து படிக்கலாம், ஆராய்ச்சிகள் செய்யலாம்.''

**கிட்டத்தட்ட எல்லா கேள்விகளுக்கும் உற்சாகமாக பதில் அளித்தவர், ஒரு கேள்விக்கு சொன்ன பதில்தான் டாப்.**

**நோபல் பரிசு பெற்ற உங்கள் அனுபவம்?**

''ஒருவகையில் இது என் கவனத்தைத் திசை திருப்புகிறது. இன்னும் கொஞ்சம் நாளில் இந்த ஆர்வம் எல்லாம் அடங்கிவிடும். அப்புறம் மீண்டும் என் ஆராய்ச்சிகளுக்குத் திரும்பிச் செல்ல வேண்டும்.''

**- ஆர்.வெங்கடேஷ்**






# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: **லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் : **கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு : எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு : 044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு : 044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு : 044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு : 044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

இணையதளத்தில்... வாங்கி, வாசித்து, மகிழ... **www.sangapalagai.com**

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

திருச்சி மாவட்ட
கல்கி வாசகர்
பி.மாணிக்கவாசகத்தின்
கைவண்ணம்
இது...








# தூரிகைத் துளிகள்...!



# “ஸ்கூல் கட்டினாதான் ரோடு காண்ட்ராக்ட்!”

திருச்சி மாநகர மேயர் எஸ்.சுஜாதா கடந்த எட்டு ஆண்டுகளாக மாமன்ற உறுப்பினர். சமீபத்திய ஆறு மாதங்களாக மாநகர மேயர் பணி அனுபவம். கோப்புகளில் குறிப்பிட்ட பக்கம் புரட்டி கோவையாகப் பதிலளிக்கிறார் வணக்கத்துக்குரிய மேயர். அவருடன் **கல்கி** வாசகர்கள் சந்திப்பு...

அப்புறப்படுத்தப்படுவதாகத் தெரியவில்லையே..?

● **மேயர்:** பொதுவாக இப்படிக் கூறினால் எப்படி? குறிப்பிட்ட இடத்தைச் சுட்டிக் காட்டுங்கள். மாநகராட்சி நிர்வாகம் சார்பாக உடனடி நடவடிக்கை எடுக்கிறோம்.

● **ஜெம்பகா ராமகிருஷ்ணன்:** வீட்டுக் குப்பைகளைப் பெரும்பாலும் பெண்கள் குறிப்பிட்ட இடங்களில் கொண்டு போய்த் தான் கொட்டுகிறார்கள். கடைவீதி மற்றும்



● **எம்.சேகரன்:** சுகாதாரப் பணியாளர்களுக்கென மாதம் சுமார் அறுபது லட்ச ரூபாய் சம்பளம் தருவதாகக் குறிப்பிடப்படுகிறது. ஆனால், அந்த அளவுக்கு மாநகரின் உள்ளே குப்பைகளும், கழிவுகளும்

மார்க்கெட் குப்பைகளைத்தான் அந்தந்த இடங்களில் குவித்து வைத்து விடுகிறார்கள். இதனால் அப்பகுதியே நாற்றமெடுக்கிறது.

● **எம்.சேகரன்:** இதில் பெண்கள், ஆண்

# மேயரோடு ஒரு சந்திப்பு!

கள் என பேதம் வேண்டாம். என் வீட்டுக் குப்பையைத் தினசரி நான்தான் குப்பைத் தொட்டியில் கொண்டு போய்க் கொட்டு கிறேன்.

● **பாரதராஜா:** மக்கும் குப்பை, மக்காத குப்பைன்னு ரெண்டா பிரிச்சு, மக்கும் குப் பைகள்லேருந்து இயற்கை உரம் தயாரிக் கலாமே!

● **மேயர்:** அரியமங்கலம் குப்பைக் கிடங்குல தினசரி அறுநூறு அல் லது எழுநூறு டன்கள் குப்பைகள்






வந்து சேருது. மாநகராட்சி சார்பா ரெண்டு மூணு இடங்கள்ல குப்பைகளைப் பிரிச்சு இயற்கை உரம் தயாரிக்கற ப்ராசஸ் நடந் துட்டு இருக்கு. பஞ்சப்பூர்ல மிகப் பெரிய இடத்துக்குக் குப்பைக்கிடங்கைக் கொண்டு போற திட்டம் இருக்கு. அப்ப இது முழுமை யாகச் செயல்படும்.

● **ஜெம்பகா ராமகிருஷ்ணன்:** மரக் கடை ஏரியாவுல பெரிய மலை போல குப்பைங்க சேர்ந்துடுது. ராமகிருஷ்ணா தியேட்டர் பாலத்துக்குக் கீழேயும் அப்படித் தான். அதுக்குப் பக்கத்துலயே சூப், பிரியாணி என்று தள்ளு வண்டியில வியாபாரம் நடக் குது.

● **மேயர்:** அந்த இடத்துல கண்டெய்னர் வைக்க ஏற்பாடு செய்றோம்!

● **சுபா:** மாநகராட்சி யிலேருந்து கல்வி வளர்ச்சி நிதிக்குனு 12 கோடி ரூபாய் ஒதுக்கப் படுது. ஆனா, கார்ப்பரேஷன் ஸ்கூல் பில்டிங் பலதும் பழசாவேதான் இருக்கு!

● **மேயர்:** வெளிப்படையா சொன்னா, இப்ப பல கான்ட்ராக்டர்களும் கட்டடம் கட்ட முன் வர்றது இல்ல. அதனால நாங்க என்ன பண்ணி யிருக்கோம்னா, ஸ்கூல் பில்டிங் கட் டித்தர முன் வர்றவங்களுக்குத்தான் மத்த (ரோடு போடுறது) கான் ட்ராக்ட்னு கொண்டு வந்திருக்கோம்.

● **பாரதராஜா:** அப்பிடியிருந்தும் புதுசா ஸ்கூல் பில்டிங் எங்கேயும் கட்டுற மாதிரி தெரியலையே!

● **மேயர்:** ஏன் தெரியலை? தென் னூர் பட்டாபிராமன் பிள்ளைத் தெரு, நடுநிலைப் பள்ளியில புதுக் கட்டடம் வேலை ஆகிட்டிருக்கு.

● **எம்.சேகரன்:** முக்கியமான விஷயம். மாநகராட்சி நடுநிலைப் பள்ளிகள்ல படிக்கற புள்ளைங்கள்ல ரொம்ப பேரு, மேல் படிப் பைத் தொடர முடியாம இடையிலேயே நின்னுடுறாங்க. அதுக்குப் புதுசா மாநகராட்சி



## "சும்மா குறையே சொல்லிட்டு இருக்காதீங்க!"

மேனிலைப் பள்ளிகளைக் கொண்டு வரலாம். நடுத்தர மற்றும் ஏழைக் குடும்பப் பிள்ளைகளுக்கு அது ரொம்ப உதவியா இருக்குமே?

● **மேயர்:** துவக்கப்பள்ளிகள், நடுநிலைப் பள்ளிகள்னு மாநகராட்சி பொறுப்புல அறுபது பள்ளிகள் இருக்கு. இப்பத்தான் டாக்டர் மதுரம் மேனிலைப் பள்ளி மாநகராட்சி வசம் வந்திருக்கு. புதுசா மேனிலைப் பள்ளிகள் உருவாக்கணும்னா மாநகர் உள்ளே இடங்கள் வேணுமே!

● **எம்.சேகரன்:** பத்து நடுநிலைப் பள்ளிகள் இருக்கற ஏரியாவுல, ஒரு மேனிலைப் பள்ளியாவது கொண்டு வரணும்.

● **ஜெம்பகா ராமகிருஷ்ணன்:** பொதுவா திருச்சிக்குள்ளார மாநகரப் பொதுக் கழிப்பிடங்கள் ரொம்பக் கம்மி. இன்னும் அதிக இடங்கள்ல கட்டித் தரணும். கழிவறை வசதி இல்லாத வீட்டுப் பெண்கள் மற்றும் பிள்ளைகளோட சிரமங்கள் சொல்லி மாளாது.

● **சுபா:** மத்திய பேருந்து நிலையத்துல இலவச சிறுநீர் கழிப்பிடப் பகுதி ரொம்ப மோசம். கழிப்பிட வசதிகள் அதிகப்படுத்தப்படணும். அதைவிட முக்கியம், அதைச் சுகாதாரமா வெச்சிக்கணும்.

● **பாரதராஜா:** மாநகராட்சி சாலைகள் தரம் சொல்லிக்கற மாதிரி இல்ல. ஒரு சின்ன மழை பெய்ஞ்சாலே, ரோடு குண்டும் குழியுமா ஆயிடுது. கேரளாவுல ரோடு போட்டா, மினிமம் அஞ்சு வருடத்துக்கு அந்த ரோடு போட்ட கான்ட்ராக்டர்ட்ட உடனடி பராமரிப்பும் சேர்த்துத் தந்திடுறாங்க.

● **மேயர்:** சுற்றுலாத்துறை சார்பா தில்லைநகர் ரோடு போடப்பட்டிருக்கு. இப்ப அது நல்லாத்தானே இருக்கு. கொறைஞ்சது இருபது வருஷத்துக்குச் சீர் கெடாத சாலை வசதி மற்றும் வடிகால் வசதிகள் கொண்டு வரப்பட இருக்கு.

● **எம்.சேகரன்:** மாநகராட்சி இடங்கள்ல இருக்கறவங்க மேல நடக்குற நீதிமன்ற வழக்குகள்ல, சம்பந்தப்பட்ட துறை அதிகாரிகள் சரியான நாள்ல ஆஜராகாமப் போயிடுறாங்க. அதனால பல வழக்குகள்ல ஆக்கிரமிப்பாளர்களுக்குச் சாதகமா 'எக்ஸ் பார்ட்டி' தீர்ப்பு கெடைச்சுடுது. அதை வெச்சுக்கிட்டு ரொம்ப இடங்கள்ல அந்த இடம் தங்களுக்கே முழு உரிமைன்னு ஆக்கிரமிப்பாளர்கள் உரிமை கொண்டாடுறாங்க. இதுக்கு என்ன நடவடிக்கை எடுக்கப் போறீங்க?

● **மேயர்:** எந்த இடம்னு எழுத்துபூர்வமா என்கிட்ட கொடுங்க. மேலும் மாநகராட்சி இடங்கள் சம்பந்தமா கோர்ட்ல இனி வரும் காலங்கள்ல உரிய அதிகாரிகளை அவசியம் ஆஜர் ஆக அறிவுரைப்படுத்தி 'எக்ஸ் பார்ட்டி' தீர்ப்பு ஆகிடாம நடவடிக்கை எடுக்கப்படும். ○

### தமிழகத்தில் முதன்முதலாய்...

*உறையூர் பஞ்சவர்ணேஸ்வரர் ஆலயத்தில்தான் தமிழகத்திலேயே முதன்முதலாக பெண் ஓதுவார் (அங்கயற்கண்ணி) நியமிக்கப்பட்டார். இன்றும் அவர் அங்கே ஓதுவாராக உள்ளார்.*

**- இரா.கணேசன்**



✱ செயலாக வழி...?

● மு.பெரியசாமி, விட்டுக்கட்டி

? அமைதியை நிலைநாட்ட சில நேரங்களில் போர் தேவையாக இருக்கிறது என்று ஒபாமா கூறியிருப்பது பற்றி?

! அமைதிக்கரம் நீட்டப்படும்போது, அதைப் பற்றுவதற்கு எதிர்த் தரப்புக் கரமும் நீளவேண்டும். அதை விடுத்து அந்தக் கரம் ஆயுதத்தை ஓங்கினால், அமைதியை நிலைநாட்ட போர் தேவைப்படும் என்பது உண்மைதான். ஆனால், உள்நாட்டில் அமைதி நிலைநாட்டுவதற்கும் வேறு ஒரு நாட்டு மக்கள் மீது போர் தொடுத்து நடத்துவதற்கும் வித்தியாசம் உண்டு. முந்தையது அமைதிப் போர்; பின்னது ஆக்கிரமிப்பு.

● நெல்லை எஸ்ஸார், திருநெல்வேலி

? மோசமான முன் பதிவு என்று எதனைச் சொல்வீர்கள்?

! தங்களது அடுத்த ஐந்தாண்டுகாலத் தலையெழுத்தை நிர்ணயித்துக் கொள்ளும் தேர்தல்களில், பணம் வாங்கிக் கொண்டு சிலர் பதிவு செய்யும் வாக்குகளை!



✱ போரின் தேவை...

● பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? ''அ.தி.மு.க. ஆட்சி மலர்ந்தால் தங்கத்தின் விலையை 5,000 ரூபாயாக குறைக்கக் கூடிய சூழலை எங்களால் உருவாக்க முடியும்'' என பொன்னையன் கூறியுள்ளது குறித்து...?

! 'அத்தைக்கு மீசை முளைத்தால் சித்தப்பா' என்றுதான் வசனம் கேள்விப்பட்டிருக்கிறோம். 'சித்தப்பா முன் பிறந்திருந்தால் பெரியப்பா' என்று புதுமொழியும் சேர்த்துக் கொள்கிறார்! பெயரில் பொன் இருப்பதாலேயே அவர் சொல்வது பொன்மொழியாகிவிடாது!

● ஏ.மகேஸ்வரி, மதுரை

? ''சமத்துவபுரம் கட்டுவதால் ஜாதி ஒழிந்துவிடாது'' என்று சிவகாமி (முன்னாள் ஐ.ஏ.எஸ்) கூறியிருக்கிறாரே?'

! ரொம்ப சரி; ஏற்றுக் கொள்கிறோம். ஆனால், ஜாதி ஒழிய எது உருப்படியான வழி என்று சிவகாமி கருதுகிறார்...? அது தெரியவந்தால்தான் அவர் கருத்து முழுமை பெறும். அதற்கேற்ப தராசின் பதிலும் முழுமை பெறும்.

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? இலங்கையில் சரணடையும் விடுதலைப் புலிகளைச் சுட்டுக்கொல்ல ராஜபக்ஷயவின் தம்பி உத்தரவிட்டதாகக் கூறுகிறாரே ஃபொன்சேகா?

! தமது வார்த்தைகளை, சொன்ன வேகத்தில் வாபஸ் பெற்றுள்ளார் என்பதைக் கவனிக்கிறபோது, அவரது பொறுப்பின்மையும் அரசியல் பிரவேச அவசரமும் தமிழர்களுக்கு எத்தனை அபாயமாக அமையக்கூடும் என்பது புரிகிறது!

● ஜே.துரைராஜ், சென்னை-87

? விபசாரத்தைத் தடுக்க முடியவில்லை என்றால் அதை ஏன் சட்டபூர்வமாக்கக் கூடாது என்று உச்சநீதிமன்றம் மத்திய அரசிடம் கேள்வி எழுப்பியுள்

# கோபன்ஹேகன் மாநாட்டு தோல்வி?



ளதே?

! விபரீதமான சிந்தனை! எந்தக் குற்றத்தைத்தான் முற்றிலும் தடுக்க முடிந்திருக்கிறது?! அனைத்துக் குற்றங்களையும் சட்டபூர்வமாக்கி விடுவதா தீர்வு?! விபசார தடைச் சட்டத்தை நடைமுறை நோக்கில் மறு பரிசீலனை செய்து, திருத்தி, மேம்படுத்தி, அந்தக் கொடுமையைக் குறைக்க முடியும். அதற்கான நுண்ணுணர்வும் சட்டப் பின்னணியும் ஒருங்கே படைத்தவர்களை ஈடுபடுத்தி இதைச் செய்யலாம்.

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

**? அயோத்தியில் ராமர் கோயில் கட்டுவதை முஸ்லிம்கள் ஆதரித்தால், அந்தச் சமூகத்தைச் சேர்ந்த ஒருவர் நாட்டின் பிரதமராக முடியும் என பால் தாக்கரே கூறுவது நியாயமா?**

! அயோத்தியில் சங் பரிவார் குறிப்பிடும் இடத்தில் ராமர் கோயில் கட்டுவதை ஆதரிக்காத ராம பக்தர்களேகூட பிரதமர் ஆகலாம் என்னும்போது, அதே கருத்துடைய ஒரு முஸ்லிம் ஏன் பிரதமராக முடியாது? அவர் முழுமையான இந்தியராக, மக்கள் ஆதரவு பெற்ற நல்லறிஞராக இருக்க வேண்டும் என்பதே நிபந்தனை.

● அதிபன், ஈரோடு

**? "கலைஞர் நடந்து சென்று கிளப்பிய புழுதியில் நனைந்தவர்கள் நாங்கள். ஒரு தலைமுறையைத் தாண்டிக் கூட இன்னும் அந்தப் புழுதியில் குளித்துக் கொண்டிருக்கிறோம்" என்று கமல்ஹாசன் தமிழக அரசு திரைப்பட விருதுகள் வழங்கும் விழாவில் பேசியுள்ளாரே?**

! இப்படிப்பட்ட முகஸ்துதி புழுதி முதல்வருக்கு அலர்ஜி ஏற்படுத்தாததுதான் ஆச்சர்யம்.

● ச.ராஜசேகர், செய்யாறு ❐

## நீங்கள் கேட்டவை - தராசு

**? நம்பர் ஒன் கோல்ஃப் ஆட்டக்காரர் டைகர் வுட்ஸ், சொந்த வாழ்க்கையில் தவறு செய்துவிட்டு அதற்கான தண்டனையை அனுபவிக்கத் தொடங்கியுள்ளது பற்றி...?**

! சொந்த வாழ்க்கை எப்படி இருந்தாலும் பொது வாழ்க்கை சிறந்தோங்கி

☐ ரூ.150/- பரிசு பெறுபவர் :

ச.ராஜசேகர், செய்யாறு

னால் போதும் என்ற கருத்து தவறா னது என்பது மறு படியும் நிரூபிக்கப் பட்டிருக்கிறது. தூய்மை, நேர்மை, மன வலிமை என்ப தெல்லாம் பகுதி அளவில் இருந்து பயனில்லை... "இழுக்கத்தின் எய்துவர் எய்தா பழி" என்றார் வள்ளுவர்.



★ வேகமான வா ரி



★ பிந்தனை மொழி!

● ஜி.ஜெயராமன், கூந்தலூர்

**? "நீதிக்காக நீண்ட காலம் காத்திருக்க வைத்து, மக்களின் பொறுமையைச் சோதிப்பது சரியல்ல; நீதி விரைவில் கிடைப்பதற்கான வாய்ப்புகளை ஏற் படுத்துவது அவசியம்" என்று சுப்ரீம் கோர்ட் தலைமை நீதிபதி பேசியுள் ளாரே?**

! பேசியதோடு நில்லாது, அதற்கு அவரே செயல்வடிவம் தந்தால் நல்லது. வழக்குகள் துரிதமாக நடந்து முடிய சில வழி முறைகளும் ஒழுங்கு முறைகளும் அரசின் ஒத்துழைப்புடன் உருவாக்கி அமல் படுத்தினால், நிலு வையில் உள்ள வழக்குகள் குறை வது நிச்சயம்.



★ ஜாதி ஒழிய...

● ஜி.ரெஜினா பானு, பழனி

**? கோபன்ஹேகன் பருவநிலை மாநாடு தோல்வியடைந்துவிட்டதே?**

! வளர்ந்த நாடுகள், வளரும் நாடுகள் மீது கட்டுப்பாடுகளை விதிக்க முன்வரு கின்றனவே தவிர, தங்களைக் கட்டுப் படுத்திக் கொள்ளத் தயாராக இல்லை. தோல்விக்கு இதுவே முக்கிய காரணம். இருப்பினும், இத்துறையில் கவனம் திரும்பியிருப் பதே ஒரு நல்ல ஆரம்பம். தோல்வி, வெற்றியின் முதல் படியாக விளங் கட்டும்.

● ச.விடுதலை மலர், வெளிப்பட்டினம் ★

**? தினமணி ஆசிரி யரை முரசொலியில் கடு மையாக விமர்சனம் செய்கிறார்கள். ஆனால், செம்மொழி மாநாட்டில் அவரை வரவேற்புக்குழுவில் நியமித் திருக்கிறார்களே?**

! நல்லவிஷயம்தானே! அரசியல் வேறு பாடுகளைக் கடந்து, தமிழ் மாநாடு அனைவரையும் அரவணைக்க இது ஆரம்பமாக இருக்கட்டும். தமிழ் மாநாடு நடத்த முதல் குரல் கொடுத்தவரே தினமணி ஆசிரியர்தான் என்பதால், வைத்தியநாதன் வரவேற்புக் குழுவுக்கு நியமனமானது பொருத் தமே. (பத்திரிகைப் பணி மிகுதியால் அவர் அப் பொறுப்பை ஏற் காமல் மறுத்துள் ளார்.) அதே சம யம், வைத்தியநா தன் மீது தனிப் பட்ட முறையில் தாக்குதல் நடத்த, முரசொலி செம்மொழியை வன்மொழியாகப் பயன்படுத்துவது வருத் தமே.



★ முதல் குரல்

★ ரூ.75/- பரிசு பெறுபவர் :

ச.விடுதலை மலர், வெளிப்பட்டினம்



# கல்கி




2010 ஜனவரி 3
விரோதி மார்கழி 19
மலர் : 68
இதழ் : 23


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## இடைத்தேர்தலில் தோற்றது யார்?

திருச்செந்தூர், வந்தவாசி இடைத்தேர்தல்களில் வெற்றி பெற்றவர்களுக்கு நமது வாழ்த்துகள் உரியன. 78 சதவிகிதமும் 84 சதவிகிதமும் வாக்குப் பதிவுக்கு வழிகோலிய தொகுதி வாக்காளர்களும் வாழ்த்துக்குரியவர்களே.

ஆனால், இந்த இடைத்தேர்தலில் ஜனநாயக மரபுகள் தோற்றுப் போயுள்ளன என்பதுதான் வருத்தத்துக்குரிய விஷயம். மாநில தேர்தல் கமிஷனர் நரேஷ் குப்தா, ஒவ்வொரு வாக்குச்சாவடியிலும் வீடியோ காமெரா பொருத்தி, வோட்டுப் பதிவைக் கண்காணிக்க ஆணையிட்டதனால்தான் கள்ளவோட்டுகள் தவிர்க்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு வாக்காளரின் அடையாளமும், பதிவுகளில் சரிபார்க்கப்பட்ட பிறகே அவர் வாக்களிக்க அனுமதிக்கப்பட்டுள்ளார். ஆயிரக்கணக்கான காவல் துறையினருடன் மத்திய ரிசர்வ் காவல் துறையினரும் கர்நாடகா ரிசர்வ் காவல் துறையினரும்கூட இத்தேர்தலை அமைதியாக நடத்துவிப்பதற்கென்று அழைக்கப்பட்டிருக்கின்றனர்.

மொத்தத்தில், இரண்டு தொகுதிகளில் சில லட்சம் வாக்காளர்கள் முறையாக வாக்களிப்பதற்காக, பலகோடி ரூபாய் வரிப்பணம் செலவிடப்பட்டிருக்கிறது! சராசரி தேர்தல் செலவுகளைக் காட்டிலும் மிக அதிகம் செலவாகியுள்ளது.

இதற்குக் காரணம் கள்ளவோட்டு, பண விநியோகம் போன்ற முறைகேடுகள் பற்றியும் வன்முறை குறித்தும் தேர்தல் கமிஷன் கொண்ட கவலையும் எச்சரிக்கையும்தான். இவ்வளவு கெடுபிடிகளுக்




கிடையே ஒரு தேர்தல் நடைபெறுவதை ஆரோக்கியமான ஜனநாயகமாக எவ்வாறு ஏற்க முடியும்?! பிரசார கட்டத்தின்போதே பலவிதமான முறைகேடுகளை, ஆளுங்கட்சியினரும் எதிர்க் கட்சியினரும் செய்தது கண்டறியப்பட்டுள்ளது. ஆளுங்கட்சிக்கு ஆதரவாகச் செயல் பட்டதற்காக உயர்மட்ட காவல் அதிகாரி (தென்மண்டல ஐ.ஜி) கிருஷ்ணமூர்த்தியைப் பணி மாற்றம் செய்யத் தேர்தல் ஆணையம் உத்தரவு பிறப்பிக்க நேர்ந்திருக்கிறது. தேர்தல் விதி மீறல் மற்றும் முறைகேடுகள் தொடர்பாக இரவெல்லாம் புகார் வர, நரேஷ் குப்தா தூக்கமின்றி அவதியுற்றதாகச் செய்திகள் வெளியாகியுள்ளன. பாகுபாடின்றி அனைத்துக் கட்சியினரும் முறைகேடுகளில் ஈடுபட்டுள்ளனர். தி.மு.க. வேட்பாளரின் மகனுக்குச் சொந்தமான வாகனத்தில், ஏராளமான அயல்நாட்டு மது பாட்டில்கள் கைப்பற்றப்பட்டிருக்கின்றன. அ.தி.மு.க / ம.தி.மு.க. தொடர்புடைய சிலரிடம், ஹோட்டல் அறையில் வைத்து லட்சக் கணக்கில் ரூபாய் நோட்டுக்கள் அடங்கிய பெட்டிகள் பிடிபட்டுள்ளன!

அரசியல்வாதிகள்தான் தரம்தாழ்ந்துபோய் முறைகேடுகளில் ஈடுபடுகிறார்கள் என்றால், வாக்காளர்களும், தங்கள் வோட்டுகளுக்கு விலை பேச வேண்டுமா? தங்கள் வாக்குரிமை விலைமதிப்பற்ற ஜனநாயக ஆயுதம் என்பதை அவர்கள் உணரவேண்டாமா?

துரதிர்ஷ்டவசமாக, வாக்காளர்கள் என்கிற பெருங்கூட்டம், தலைவர்களைத்தான் ஆதர்சமாகக் கொள்கிறது! அவர்கள் கூச்சநாச்சமின்றி முறைகேடுகளில் ஈடுபடுகிறபோது, 'நாமும் வோட்டுக்குப் பணம் வாங்கினால் என்ன?' என்கிற எண்ணம் சராசரி வாக்காளனுக்கு வரத்தான் செய்யும்.

அரசியல் களத்திலிருந்து லஞ்ச - ஊழல் முறைகேடுகளை அப்புறப்படுத்தும் ஒரு சுனாமி இயக்கமே இன்றைய தேவை. இல்லாவிட்டால், இடைத்தேர்தலைப் போல் பல்லாயிரம் மடங்கு செலவழித்துத்தான் பொதுத் தேர்தல்களை நடத்த வேண்டி வரும். வரிப்பணத்திலிருந்து செய்யப்படும் அச்செலவு, வாக்காளர்களுக்கே விதிக்கப்படும் அபராதமாகத்தான் முடியும்!



# அழகின் ஆராதனை!

● சிக்ஸ் பேக் என்பது இத்தனை சமாசாரங்கள் அடைந்துள்ள பெரிய bagஆ? **-எஸ்.ஆர்.ஸ்வாமி, திருநெல்வேலி-11** ● மாறுவோம் மாற்றுவோம் படிக்கும் ஆண்களும் பெண்களும் மாறுவார்கள். கட்டாயம் மாற்றுவார்கள் என்று எதிர்பார்க் கலாம்.- **சாந்தா ராஜா மணி, சென்னை - 88** ● கல்கி என்றைக்கு அழகில்லாமல் இருந்தது; இப்பொழுது அழகு ஸ்பெஷல் *(27.12.09)* கொண்டு வருவதற்கு? 68 வயதாகிவிட்டதே என்பதனால் உங்களுக்குச் சந்தேகம் வந்துவிட்டதா? எங்கள் கல்கி என்றும் இளமை குன்றாதவள். *1.8.1941*லிருந்து கல்கியை ரசித்துப் படித்து வருபவன். இன்று எனக்கு வயது 90. இருந்தாலும் ஞாயிற்றுக் கிழமைகளில் அன்று வரும் கல்கியைப் பார்த்தால்தான் காப்பி ருசிக்கும். **- வெ.முத்து கிருஷ்ணன், மைலாப்பூர்** ● ஹிட்ச்காக் பத்து கட்டளைகளில் ஒன்றாக 'நடிகையை என் மனைவிக்குப் பிடிக்க வேண்டும்' எனக் கூறியது அதி அற்புதம்! **- சி.என். ரமா தேவி, சென்னை** ●'இதழ் முழுக்க...' 'அழகின் ஆராதனை' **- மயிலை கோபி, சென்னை - 83** ● அழகுக்கு ஆணிவேர் அன்பு என்பதை காஞ்சிப் பெரியவரின் அருள்வாக்கு மூலம் அழகாகத் தெரிந்து கொண்டோம். **- என்.சீத்தா லெட்சுமி, சென்னை - 40** ● 'நிறம் மாறும் பூ' சிறுகதை கண்கலங்க வைத்துவிட்டது. **- கே.என். சுப்பிரமணியன், சென்னை - 15** ● ஐம்பது கமல்ஹாசனை ஒரே இடத்தில் கொண்டு வந்து காட்டிய ஏ.பி.ஸ்ரீதருக்கு ஐம்பது பூச்செண்டுகள். **- வீ.உதயக்குமாரன், வீரன்வயல்** ● 'மாறுவோம் மாற்றுவோம்' என கலந்துரையாடல்களை ஒவ்வொரு நகரிலும் நடத்தினால் நிச்சயம் மாறுதல் ஏற்படுவது உறுதி. **- ரேவதிப்ரியன், ஈரோடு - 1** ● ப.சிதம்பரம் + தெலங்கானா பற்றிய கார்ட்டூன் கூர்மையானது! **- அயன்புரம் த.சத்தியநாராயணன்**

**கல்கி 20.12.09 இன்டர்நெட் ஸ்பெஷலில், தமிழின் முதல் ஆன்லைன் புத்தகக் கடை தமிழ்நூல்.காம் எனக் குறிப்பிட்டிருந்தீர்கள். அதற்கு முன்பிருந்தே** TAMBHI (Tamil Book House on Internet) **என்ற ஆன்லைன் புத்தக விற்பனை மையத்தை 1997 முதல் நடத்தி வருகிறோம்.**

**- அ.ராஜ்மோகன், சென்னை.**

---

**ஸ்ரீ லலிதா - அத்தியாயம் 12**

**அடுத்த வாரம்**

**வட்டமேஜை**





கேரளாவின் பம்பா நதிக்கரையில் இருக்கும் அதே சாந்நித்தியத்தோடு காவிரிக்கரையிலும் அருள்பாலிக்கிறார் ஹரிஹர புத்திரன். திருச்சி கண்டோன்மென்ட் பகுதியில் இருக்கும் இந்த ஐயப்பன் அமைதியில் ஆழ ஆழத் திளைக்கிறார். ஆம்... கோயிலின் நுழைவாயிலில் நம்மை வாரி அணைத்துக்கொள்ளும் அமைதி கோயிலுக்குள் செல்லச் செல்ல விஸ்வரூபமெடுத்து வியாபிக்கிறது. கோயிலின் அலுவலகத்துக்கு அருகே இருக்கும் விநாயகர் மகா பெரியவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டதாம். இடதுபுறமாகச் சென்றால் பிராகாரம் முழுக்க அன்பைப் போதிக்கும் பொன்மொழிகள். கோயிலின் பின்புறமாக இருக்கும் பிரார்த்தனை பெட்டியில் நமக்கான பிரார்த்தனையை எழுதிப் போடலாம். அவை ஐயப்பனின் ஜென்மநட்சத்திரத்தில் பூஜைக்காக எடுத்துக்கொள்ளப்படுகின்றன. இங்கே ஐயப்பனுக்கு மட்டுமே பூஜை; வேறு யார் பெயருக்கும் இல்லை. வடமேற்கு மூலையில் இருக்கிறது தாய் சன்னிதி. 'அம்மா என்றழைக்காத உயிரில்லையே...' என்ற சினிமா பாடல் ஒலித்துக்கொண்டே இருக்கிறது. அதுதான் பூஜைக்கான மந்திரம். இசையரசி எம்.எஸ்.சுப்புலட்சுமிக்கு அர்ப்பணிக்கப்பட்ட புனிதக் கற்களின் தொகுப்பு நம்மை ஈர்க்கிறது. இந்தியாவிலுள்ள அனைத்து புனித ஸ்தலங்களிலிருந்தும் கொண்டுவரப்பட்டவை. கர்ப்பிணிகளுக்கென்று தனி இருக்கைகள். இங்கு மரத்திலிருந்து உதிர்ந்து விழும் ஓர் இலையைக்கூட பக்தர்கள் வீட்டுக்கு எடுத்துச் செல்வதில்லை என்று பெருமைப்படுகிறார் கோயில் நிர்வாகி ஒருவர்.

ஒவ்வொரு ஞாயிறு அன்றும் சிறுவர்களுக்கு பாலவிஹார் வகுப்புகள் உண்டு. அதில் தேவாரம், திருவாசகம் பயிற்றுவிக்கப்படுகின்றன. விஜயதசமி அன்று மாத்ரு பூஜை. குழந்தைகள் தங்கள் அம்மாவுக்கு நடத்தும் பாத பூஜை அது. கார்த்திகை உத்திர நட்சத்திரத்தில் இங்கே திருவிழாக் கொடியேற்றம். அதையொட்டிய ஞாயிறு அன்று சங்காபிஷேக பூஜையும் உண்டு. ஆன்மிக விஷயங்களில் மட்டுமல்லாது சமூகக் காரியங்களிலும் கவனத்தைச் செலுத்துகிறது கோயில் நிர்வாகம். இங்கு வரும் பக்தர்களில் 130 பேர் உறுப்பு தான விருப்பத்தை கோயில் நிர்வாகத்திடம் பதிவு செய்திருக்கின்றனர். கண்தானம் பதிவு 1114 பேர். கோயிலுக்கு எதிரே இருக்கும் சாலையின் அரை கிலோமீட்டர் பகுதியை கோயில் நிர்வாகமே சுத்தமாகப் பராமரித்து வருகிறது. ○

"இந்தத் திட்டம் அறிவிக்கப்பட்டு நடைமுறைக்கு வந்த ஒன்றரை வருஷத் துல மட்டும், ஆக்ஸிடெண்டுல செத்துப் போனவங்களோட எண்ணிக்கை நூற்று இருபது! திருச்சி தஞ்சாவூர் தேசிய நெடுஞ் சாலையை, நான்கு வழிச் சாலையாக மாற்றி யதிலிருந்து எங்க உயிர் எங்க கையில இல்லைங்க! இறந்தவர்கள்ல முப்பது பேர் பி.ஹெச்.ஈ.எல். எம்ப்ளாயீஸ். குழந்தைங்க முப்பத்திரண்டு. கர்ப்பிணிங்க நாலு பேர். இனி எத்தனையோ... இந்தச் செய்தியை உங்க பத்திரிகைல அச்சிடுற நேரத்துல அஞ்சாறு உயிர் போனாலும் ஆச்சர்யப்பட றதுக்கில்லை." - அதிர்ச்சி மேல் அதிர்ச்சியை அடுக்கிக்கொண்டே போகிறார் திருவெறும் பூர் எல்லக்குடி ஊரக நலச்சங்கங்களின் கூட்டமைப்பின் தலைவர் சுப்பிரமணியன்.

**நாற்கர சாலை வர்றது நல்ல விஷயம் தானே?**

"ஸார், நாங்க நாற்கர சாலையை எதிர்க் கலைங்க. ஆனா அந்தச் சாலை அமையற இடத்துல இருக்கற குடியிருப்புவாசிகளோட பயன்பாட்டுக்காக சர்வீஸ் ரோடு அமைச்சுத் தராததுனாலதாங்க இவ்ளோ உயிர்பலியும், பிரச்னையும். இந்தியாவுல எங்கே நாற்கர சாலை போட்டாலும் அந்தச் சாலையோட ரெண்டு பக்கத்துலயும் 25 அடிக்கு சர்வீஸ் ரோடு போட்டுத் தரணும்னு விதியே இருக்கு. ஆனா... இங்க மட்டும் அது நடக் கலை. தஞ்சாவூர்லேர்ந்து துவாக்குடிவரைக் கும் இதுல எந்தப் பிரச்னையும் இல்லை. காரணம், தஞ்சாவூர் மாவட்ட எல்லை அது. அதனால அந்த மாவட்ட கலெக்டர் சர்வீஸ் ரோடு போடறதுக்கான இடத்தைக் கையகப் படுத்திக் கொடுத்திட்டார். இங்கே அது நடக்கலை. குடியிருப்புப் பகுதியோட குறுக் குச் சாலைகள் எதுவும் நேரடியாக தேசிய நெடுஞ்சாலையில் இணையக்கூடாதுன்னு தேசிய நெடுஞ்சாலைச் சட்டமே இருக்கு. அந்தச் சட்டத்தை எங்க மாவட்ட நிர்வா கம் துளிக்கூட நடைமுறைப்படுத்

# யமன்


* சுப்பிரமணியன்


* ஜெயம்மா



தலை,'' என்று ஆதங்கப்படுகிறார் சங்கத்தின் ஒருங்கிணைப்புச் செயலாளர் சண்முகம்.

**நிலங்களைக் கையகப்படுத்துறதுல என்ன பிரச்னை?**

''கையகப்படுத்த வேண்டிய இடம் ஆக்கிரமிப்புக்காரங்க கையில இருக்கு. அதுல அவங்க வணிக வளாகங்களைக் கட்டிவிட்டு சம்பாதிச்சுக்கிட்டு இருக்காங்க. சர்வீஸ் ரோடு வந்ததுனா அவங்க ஆட்டமெல்லாம் அடங்கிப் போயிடுமில்லை. அதனால அவங்க கூட்டமைப்பு ஒண்ணு சேர்ந்து கைலாஷ் நகர் சந்தோஷ் மஹால்ல கூட்டம் போட்டு, ஒரு குறிப்பிட்ட தொகையை வசூல் பண்ணி, பார்க்க வேண்டியவங்களைப் பார்த்து கொடுக்க வேண்டியதைக் கொடுத்துட்டாங்க. அதனாலதாங்க வரவேண்டிய சர்வீஸ் ரோடு வராமப் போயிருச்சு. துவாக்குடிலேர்ந்து பால் பண்ணை வரைக்கும் இருபது கிலோ மீட்டர் தூரத்துக்கு வசிக்கிற கிட்டத்தட்ட இரண்டு லட்சம் பேருக்கு உயிர் உத்திரவாதமில்லை. இதெல்லாம் மாவட்ட நிர்வாகத்துக்குத் தெரியும்ங்க. இருந்தாலும் அவங்களுக்குப் பணம்தான் முக்கியமே தவிர மக்களோட உயிர் இல்லை'' என்கிறார் துணைத் தலைவர் இமயவரம்பன்.

**இதனால வேறென்னவெல்லாம் பிரச்னை?**

''பால் பண்ணையிலேர்ந்து துவாக்குடிக்கு இடையில மட்டும் ஆறேழு காலேஜ் இருக்கு. இதுல என்.ஐ.டி.யும் அடக்கம். பள்ளிகள் மட்டும் இருபதுக்கு மேல இருக்கும். அதுவுமில்லாம பி.ஹெச்.ஈ.எல்., அதையே நம்பி இருக்கற நூற்றுக்கணக்கான சிறுசிறு தொழிற்சாலைகள்.... அதுல வேலை செய்யறவங்க எல்லாமே இந்த ரோட்டைத்தான் பயன்படுத்தறாங்க. ஸ்கூல் வேனுக்குப் பின்னாடியே தொழிற்சாலைகளுக்கு இரும்பு சாமான்களை ஏத்திக்கிட்டு




# சாலை NH67



லாரி வரும். அதைத் தொடர்ந்து பயணிகள் பஸ், அப்புறம் டூ வீலர், கார்ல போறவங்க, ரோட்டு ஓரமா நடந்துபோறவங்கன்னு ஏகத்துக்கும் நெருக்கடிங்க. இந்த ரோட்டுல போகும்போது யமனும் கூடவர்றது மாதிரியே இருக்கும்ங்க" என்கிறார் ஜெமிம்மா.

**அதிகாரிங்க என்ன சொல்றாங்க?**

"எங்க உயிரைப் பாதுகாத்துக் கொடுங்கன்னு அதிகாரிகள் முதல் அமைச்சர்கள் வரைக்கும் எத்தனையோ பேருக்கு மனு கொடுத்துப் பார்த்தாச்சு. எங்க உயிருக்கு ஆபத்துங்கற விஷயத்தை குடியரசுத் தலைவரோட வெப் ஸைட்டிலும் போட்டுட்டோம். இன்னும் விடிவு பொறக்கலை. மத்திய அமைச்சர் கமல்நாத், உள்ளூர் அமைச்சர் கே.என்.நேரு வரைக்கும் விஷயத்தைக் கொண்டு போயிட்டோம். ஆனா ஒருத்தரும் கண்டுக்கலை. எங்க எல்லக்குடி பஞ்சாயத்துத் தலைவர் தமிழ்ச்செல்வனே எங்களுக்கு எதிரா இருக்கார்னா பாருங்களேன்... எங்கள் உயிருக்குப் பாதுகாப்பில்லை. அதனால அரசாங்கத்திடமிருந்து எதுவும் வேண்டாம்னு ரேஷன் கார்டை ஒப்படைக்கறதைத் தவிர வேற வழி இல்லை" என்று வருத்தப்படுகிறார் பொதுச் செயலாளர் சக்திவேல்.

நித்தம் மக்களின் உயிரோடு உரசிப் போகும் இந்தப் பிரச்னை நிர்வாக அமைப்பின் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையை அழித்து வருகிறது! ○

## "இந்த ரோட்டல போகும்போது யமனும் கூடவர்றது மாதிரியே இருக்கும்ங்க"


* சண்முகம்


* சக்திவேல்


* இமயவரம்பன்



HAPPY CHRISTMAS & NEW YEAR

# COLLECTIONS FROM ALL LEADING BRANDS





























Hush Puppies













No.14, American College Complex,
Goripalayam, Madurai - 625 002.

Ph : 0452-4360128

புளியஞ்சோலை... கொல்லிமலையின் அடிவாரம். இன்னும் சொல்வதெனில் நகரிலிருந்து வடமேற்கில் 72வது கி.மீட்டரில் இருக்கும் திருச்சி மாவட்டத்தின் எல்லை. இன்னும் குறிப்பிட்டுச் சொல்வ தெனில், திருச்சி மாவட்டத்தின் முக்கியமான சுற்றுலாத்தலமாக, அத்தனை சாத்தியக் கூறுகளோடும் இருக்கின்ற பகுதி. எல்லா வற்றுக்கும் மேலாக மாவட்ட நிர்வாகம் சுற்றுலாத் தலமாகவே அறிவித்திருக்கும் மலையும் மலை சார்ந்த ஏரியா. சரி... எதற்கு இத்தனை டீட்டெய்ல் என்கிறீர்களா...?

திருச்சி மாவட்டத்துவாசிகள்ல பத்துப் பேர்கிட்ட புளியஞ்சோலை எங்கே இருக் குன்னு கேட்டு, அதுல ரெண்டு பேர் சரியா வழி சொல்லிட்டா ஆச்சர்யம்தான்.

அப்படி ஒரு பிரதேசம் இருப்பதே

# புழுக்கத்தில் புளியஞ்சோலை!

யாருக்கும் தெரியவில்லை. புளியஞ்சோலை யைச் சுற்றுலாத்தலமாக அறிவித்திருந்தாலும் அங்கு சென்று வர சுலபமான சாலை வசதி இல்லை. அப்படியே ஆர்வத்தில் கஷ்டங் களைச் சமாளித்துக்கொண்டு சென்றாலும், அந்தப் பிரதேசத்தின் பெருமைகளை எடுத் துச் சொல்ல ஒரு டூரிஸ்ட் கைட்கூட இல்லை. அங்கு நாம் சென்றபோது கண் டவை... வெறுமையான பூங்கா, ஆட ஆளில் லாத ஊஞ்சல்கள், மலையின் கண்ணீர் போல ஓடிக்கொண்டிருக்கும் ஓடை, வியா பாரமாகாத பழங்களின்மீது மாநாடு போட முற்படும் ஈக்களை விசிறியடித்துக்கொண்டி


ஆளில்லா அடிவாரம்


முகத்தில் அறையும் தனிமை


வீணாகும் ஐய்யாறு!


மதுவின் பிடியில்...



வியாபாரமே ஆகலை





விளக்கேத்த ஆளில்லை



பாலைநிலவாய் பூக்கள்?!

ருக்கும் கிழவி, கார்கள் வந்தால் டிக்கெட் கிழிக்கவேண்டுமென்பதற்காக ஒரு வயதானவர், கொடிகள் படரவேண்டிய பூங்காக்களின் வேலிகளில் துணிமணிகள் காயும் காட்சி. எல்லாவற்றுக்கும் மேலாக மது ப்ரியர்களின் சொர்க்கலோகம் என்பதாகத்தான் இருந்தது ஏரியா. மலையிலிருந்து கீழிறிங்கி வரும் ஐய்யாறு, தன்னை ரசிக்க ஆளில்லையே என்று ஏங்குகிறது. மலையின் மீதுள்ள அரப்பளீஸ்வரரைத் தரிசிக்க கருப்பட்டி மீது ஊரும் எறும்பு போல ஒற்றையடிப்பாதையில் சென்று கொண்டிருந்தனர் சில மனிதர்கள். புளியஞ்சோலை முழுக்க ஒருவிதமான தனிமையின் புழுக்கம் சூழ்ந்திருக்கிறது. ஏற்கெனவே காவிரியோர பிக்னிக் ஸ்பாட் கனவுதானா... என ஏங்கிக்கொண்டிருக்கும் திருச்சி மாவட்டவாசிகள், புளியஞ்சோலை விஷயத்தில் விழித்துக்கொள்ளாவிட்டால் அருமையான பிக்னிக் ஸ்பாட்டை இழக்க வேண்டியிருக்கும். விழிப்பார்களா...?



துருப்பிடிக்க விட்டுட்டாங்க...



துணியாவது படரட்டும்!

**மிஸ்டர் & மிஸஸ் மேல்மாடி**

**சீக்ரெட் அஃப் ப்ரெய்ன்**

ஆணும் பெண்ணும் உலகத்தையும் உறவுகளையும் வெவ்வேறு கண்ணோட்டத்தில்தான் பார்க்கிறார்கள்.

''இன்னிக்கு எங்க ஸ்கூல்ல புதுசா சேர்ந்த அரவிந்த் ரொம்ப ஃப்ரெண்ட்லிம்மா. என்னோட லன்ச் பாக்ஸ் திறக்கவே வரல. அவன்தான் ஓபன் பண்ணிக் கொடுத்தான்'' என்பாள் ஐந்து வயது ஸ்வேதா அம்மாவிடம்.

''இன்னிக்கு எங்க ஸ்கூல்ல புதுசா சேர்ந்த அரவிந்த் ரொம்ப ஸ்ட்ராங்மா. ஸ்வேதாவோட லன்ச் பாக்ஸ் திறக்கவே வரல. நான் கூட ட்ரை பண்ணினேன். ம்ஹூம்... முடியல... ஆனா அவன் திறந்து குடுத்துட்டான்''

# உணர்வுகள் பலவிதம்!




என்பான் அதே ஐந்து வயது சித்தார்த் அம்மாவிடம்.

இப்படி வெவ்வேறு உணர்வுகளை எடுத்துக்கொள்ளும் தன்மை அவர்களுக்கு எப்போது ஆரம்பிக்கிறது? இவ்வித்தியாசம் ஒரு குழந்தையின் பன்னிரண்டாவது வாரத்திலேயே தெரிய ஆரம்பிக்கிறது. ஆச்சரியமாக இருக்கா?

பன்னிரண்டாவது வார இறுதியில் ஒரு பெண் குழந்தை அந்தக் குடும்ப உறுப்பினரைத் தவிர பிறரைப் பகுத்தறிந்து தெரிந்து கொள்ளும். ஆனால் அதே பன்னிரண்டாவது வார இறுதியில் ஒரு ஆண் குழந்தைக்கு இந்த வித்தியாசம் தெரியாது. ஆனால் இடம் மாற்றி வைக்கப்பட்ட ஒரு பொம்மையை எளிதில் அடையாளம் கண்டுகொள்வான்.

பெண் குழந்தைகள், உறவுகள் மற்றும் உணர்வுகளைப் புரிந்துகொள்வதில் ஆர்வம் காட்டுவார்கள். ஆண் குழந்தைகள் பொருட்கள், அதன் அசைவுகள்

12

டாக்டர் ஏ.வி.ஸ்ரீனிவாசன்

ஆகியவற்றைப் புரிந்துகொள்வதில் ஆர்வம் காட்டுவார்கள்.

அதனால்தான் கரடி பொம்மை, பார்பி பொம்மை போன்ற பொம்மைகளில் அவளுக்கு ஆர்வம் அதிகம். ஆண் குழந்தைக்கோ ப்ளேன், ட்ரெயின், மோட்டார் என்று ஓடும் வாகனங்கள் வைத்து விளையாடும் ஆர்வம் அதிகம்.

நான்கு வயதுப் பெண் குழந்தையிடம் ஒரு கரடிபொம்மையைக் கொடுங்கள். அவள் அதனைத் தன் நண்பனைப் போலப் பொத்திப் பொத்திப் பாதுகாப்பாள். இதையே ஒரு நான்கு வயது ஆண் குழந்தையிடம் கொடுங்கள். அவன் அதனை பார்ட் பார்ட்டாகக் கழற்றி வீசி எறிந்துவிட்டு அடுத்த வேலையைப் பார்க்கப் போய்விடுவான். அவனுக்கு அது எப்படி இணைந்துள்ளது, எப்படி இயங்குகிறது என்று அறிய ஆசை... அவ்வளவே.

இதேதான் அவர்கள் வளரும் போதும் ஒவ்வொரு நிலையிலும் பிரதிபலிக்கிறது. டீன் ஏஜ் பெண்கள் கூடும்போது, படிப்பு, ஃபேஷன், நண்பர்கள், வாங்கிய ட்ரெஸ், நகைகள், சினிமா என்று பலவற்றைப் பகிர்ந்து கொள்வார்கள்.

திருமணம் முடிந்த பெண்கள் கூடும்போது கணவன், குடும்பம், பிள்ளைகள், உறவுமுறைகள் என்று பலவற்றையும் பகிர்ந்து கொள்வார்கள்.

ஆனால், டீன் ஏஜ் பையன்களும் ஆண்களும் வேலை தவிர, விளையாட்டு, கார், பைக், செல் ஃபோன் என்று இவற்றை மட்டுமே பிரதானமாகப் பேசிக் கொள்வார்கள். உறவுமுறைக்கு அங்கே பெரிதாக இடம் இருக்காது.

ஐந்து நாடுகளில் தனித் தனியாக லட்சக்கணக்கான ஆண்களிடமும்



பெண்களிடமும் ஒரு கருத்துக் கணிப்பு எடுக்கப்பட்டது. அதில் புரிந்து கொள்பவளாக, பெருந்தன்மையானவளாக, எளிதில் நட்புறவை ஏற்படுத்திக் கொள்பவளாக, அன்பு நிறைந்தவளாக, சேவை செய்பவளாக இருக்க ஆசைப்படுகிறேன் என்பதுதான்.

மூன்று லட்சம் ஆண்டுகளுக்கு முன்புதான் மனிதனின் மூளை உருவானது. இதில் கடைசி ஐம்பது ஆயிரம் ஆண்டில்தான் மூளையின் மொழியைக் கற்றுக்கொள்ளும் பகுதியைப் பயன்படுத்தி மனிதன் பேசக் கற்றுக்கொள்ள ஆரம்பித்தான். இதற்குக் காரணம் மிர்ரர் நியூரான்கள்தான். ஆடிஸம் எனப்படும் ஒரு வகையான குறைபாடுள்ள குழந்தைகளுக்கு இந்த மிர்ரர் நியூரான்கள் வலுவற்று, ஒழுங்கற்று இருப்பதாக அறியப்பட்டுள்ளது. அதனால்தான் அவர்கள் மொழி உட்பட எதனையும் கற்றுக்கொள்ள முடிவதில்லை.

''இவ்வளவு தொண்டைத் தண்ணி போக துக்கத்தைச் சொல்லிக்கிட்டு இருக்கேன்... குத்துக்கல்லு மாதிா இருக்கீங்களே''னு மனைவி புலம்புவாள். அத்தனையும் கேட்டுக்

நம் மூளையில் இருந்து மெல்லிய மின் வீச்சுக்கள் வந்துகொண்டே இருக்கின்றன. இதனை விநாடிக்கு இத்தனை சுற்று என்று கணக்கிட்டு அதனை டெல்டா, தீட்டா, ஆல்பா, பீட்டா, காமா என்று ஐந்து நிலைகளாகப் பிரிக்கிறார்கள் நரம்பியல் நிபுணர்கள். இந்த ஒவ்வொரு நிலையிலும் நம் மன, உடல் நிலைகளில் மாற்றம் இருக்கும்.

அவர்களிடம் 'நீங்கள் எப்படி இருக்க விரும்புகிறீர்கள்?' என்ற கேள்வி கேட்கப்பட்டது.

இதில் பெரும்பான்மையான ஆண்கள் அளித்த பதில், தைரியமான, போட்டி குணம் நிறைந்தவனாக, சாதிக்கும் திறன் நிறைந்தவனாக, பிறரால் புகழப்படக்கூடியவனாக இருக்க விரும்புகிறேன் என்பதுதான்.

பெரும்பாலான பெண்கள் அளித்த பதில், பிறரை எளிதில்

கொண்டு அப்படியே இருப்பான் கணவன். அதற்கு என்ன காரணம்?

*(அலசுவோம்)*

எழுத்தாக்கம் : **லக்ஷ்மி மோகன்**

## நான்கு வருட B.Sc.

பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் அடுத்த கல்வியாண்டிலிருந்து நான்கு வருட பி.எஸ்சி., இன்டெக்ரல்கோர்ஸ் அறி முகமாக உள்ளது. திருச்சி, புதுக்கோட்டை, தஞ்சாவூர் மாவட்ட மக்களுக்கு இதனால் அதிகப் பயன்.

**- ஜான் மதி**

## வாஸ்து கண்ணா வாஸ்து!

மெயின்கார்ட் கேட் பகுதியில் சமீப காலமாக பிரபலமடைந்து வருகிறது வாஸ்து தோஷ பரிகாரக் கோயில். அங்கே பூலோக நாதர் வீற்றிருந்து அருள்பாலிக் கிறார்.

**- பவித்ரா நந்தகுமார்**

திருமுருகாற்றுப்படை அரசு
வாகீச கலாநிதி
தமிழ்க் கவி பூஷணம்
உபந்நியாச கேசரி
திருநெறித் தவமணி
கந்தர் அலங்காரச் செம்மல்
தமிழ் முனிவர்
செந்தமிழ்ச் செல்வர்
என ஏராளமான
பட்டங்களும்;
பதக்கங்களும் பெற்ற;

பழமைக்கும்
புதுமைக்கும்
பாலமாகத் திகழ்ந்த
'கலைமகள்' ஆசிரியர்



# கி.வா.ஜ.

எழுதியவை

பங்கிம் சந்திர சட்டர்ஜி
சரத் சந்திர சட்டர்ஜி
தாரா சங்கர் பானர்ஜி
ரவீந்திரநாத் தாகுர்
நேதாஜி சுபாஷ் சந்திர போஸ்
இன்னும் ஏராளமான பிறமொழி எழுத்தாளர்களை
தமிழ மக்களிடையே
உலவ விட்டு ...
கலைமகள்
ஆனந்த விகடன், கல்கி குமுதம்
அமுதசுரபி போன்ற இதழ்களில்

நாவல்கள், சிறுகதைகள்
பல எழுதி இலட்சக்கணக்கான
வாசகர்களின் உள்ளத்தில் இடம் பெற்ற



# கு.நா.குமாரசாமி

எழுதி –
மொழிபெயர்த்த

# நூற்றுக்கணக்கான புத்தகங்கள்

எழுதியவர் மறைந்தாலும் **எழுத்து** மறையவில்லை
காலம் கடந்தாலும் **கருத்து** சிதையவில்லை
நீங்கள் வாங்கினால் உங்கள் **தமிழ்த் திறமை வளரும்**
நாங்கள் விற்றால் எங்கள் **தமிழ் தொண்டு சிறக்கும்**



அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
(ப.எண்) 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
மைலாப்பூர் – 600 004 தொலைபேசி: 24641314
www.alliancebook.com email: srinivasan@alliancebook.com

**30.12.09-10.1.2010**
சென்னைப் புத்தகக் காட்சியில்
ஸ்டால் **P22**க்கு வருகை தாருங்கள்

# ரோமை மயக்கிய மணப்பாறை!


* துரைசாமி

மணப்பாறை முறுக்கு! இப்ப கடல் கடந்தும் போகுது அந்தச் சரக்கு. கடந்த ஐம்பது வருடங்களுக்கும் மேலாக அதனை குடும்பத் தொழிலாகச் செய்து வரும் துரைசாமி என்பவரைச் சந்தித்தோம்...



■ மணப்பாறைக்கு இது சுமார் நூறு வருடத் தொழில். முதன்முதலா ரயில்வே ஸ்டேஷன் கேன்டீன் அய்யர்தான் இதை ஆரம்பிச்சார். இன்னைக்கு முறுக்கு தயாரிப்புல நேரடியா முன்னூறு குடும்பங்கள் ஈடுபட்டிருக்கு. மறைமுகமா இருநூறு குடும்பங்கள்.



■ கலப்படம் இல்லாத சுத்தமான பச்சரிசி மாவு, மணப்பாறை முறுக்குக்கு அச்சாரம். நாங்க அதுல நம்பர் ஒன்.

■ பச்சரிசி மாவோட கிழங்கு மாவு சேர்க்கறவங்களும் இருக்காங்க. பொட்டுக்கடலை மாவு சேர்க்கறவங்களும் இருக்காங்க.

■ சுத்தமான பச்சரிசி மாவு, ரீஃபைண்டு ஆயில், டால்டா, எள், ஓமம், சீரகம், பெருங்காயம், மணப்பாறை தண்ணி இதிலிருந்து தயாரிக்கிறதுதாங்க எங்க மணப்பாறை முறுக்கு.




■ விறகு அடுப்புதான் பெஸ்ட். பொட்டு அடுப்புல முறுக்குப் போடுறவங்களும் இருக்காங்க. ஆனா, நல்ல வேக்காட்டுக்கு விறகு அடுப்புதான்.

■ வேக்காடு பதம் கொஞ்சம் மாறினாலும்,

'மொறு மொறுப்பு' மிஸ் ஆயிடும். ஒரு வேக்காடு மட்டும் எடுக்கறவங்க, ரெண்டு வேக்காடு விட்டு எடுக்கறவங்கனு ரெண்டு பிரிவு நம்மூர்ல இருக்காங்க. எங்க தயாரிப்பு எப்பவுமே ரெண்டு வேக்காடுதான்! ஏன்னா, இதுல ருசி அதிகம்.

■ இப்ப எங்க குடும்பத்துல மூணாவது தலைமுறையா என் பேரன் கோபி வந்துட்டான். வயசு இருபது.



ஜேஜே என்ஜினியரிங் காலேஜ்ல டிப்ளமோ கடைசி வருஷம் படிக்கிறான. டெய்லி அவனும் முறுக்கு உற்பத்தியில் உட்கார்ந்திடுவான்.

■ டெய்லி நூறு கிலோ பச்சரிசி மாவுல முறுக்கு தயாரிக்கிறோம். எங்க சரக்கு எப்பவுமே மிஞ்சிப் போறது கிடையாது.

■ அமெரிக்கா, தென் ஆப்ரிக்கா, ஆஸ்திரேலியா, துபாய், சவுதி அரேபியா, பிரான்ஸ் அப்பிடினு வெளி நாடுகளுக்கும் எங்க முறுக்கு போய்ட்டு இருக்கு. ரெண்டு வாரத்துக்கு முன்னாடி ரோம் நகருக்குப் போனவங்க அவங்க சொந்தக்காரங்களுக்கு முறுக்கு வாங்கிட்டுப் போனாங்க. அங்கேருந்து எங்களுக்கு ஃபோன் பண்ணி, 'உங்க முறுக்கு நல்லா இருக்கு!'னு சொன்னாங்க.

எல்லாம் சரிங்க. இந்த மணப்பாறை முறுக்குக்கு மட்டும் அப்படி என்னங்க சிறப்பு? தனி ருசி? ரகசியம்...

''ஏதுமில்லைங்க. மணப்பாறை நிலத்தடி நீர் சற்று உப்புச் சுவை உள்ளதுங்க. அதாங்க மணப்பாறை முறுக்குக்கு அம்புட்டு ருசி!''

## கவனம் தேவை - 1

*ஸ்ரீரங்கம் தலைமை தபால் நிலையம் முன்பு ஏராளமான இரு சக்கர வாகனங்கள் நெருக்கமாக நிறுத்தப்பட்டிருப்பதால், வாசலில் மாட்டியுள்ள தபால் பெட்டியில், கடிதங்களைச் சேர்ப்பதும், எடுப்பதும் சிரமமாக உள்ளது! தபால் நிலைய ஆய்வாளர் இதைக் கவனிப்பாரா?*

**- எஸ்.எஸ்.செங்கமலம்**

## கவனம் தேவை - 2

*காலை 9.45க்கு ஸ்ரீரங்கத்தைக் கடந்துபோகும் வைகை எக்ஸ்பிரஸ் நின்று சென்றால் ஸ்ரீரங்க பூச்சந்தையிலிருந்து அரியலூர், ஜெயங்கொண்டம், விருத்தாசலம் ஆகிய ஊர்களுக்கு பூக்களை வாடுவதற்கு முன்பே கொண்டு செல்ல வசதியாக இருக்கும். இரயில்வே துறை இதைக் கவனத்தில் கொள்ளுமா?*

**- எஸ்.எஸ்.செங்கமலம்**

**வெ**யிலில் காய்ந்து, மழையில் நனைந்து மக்களின் குறைகளைப் போக்கி வரும் வெக்காளி, மாட மாளிகை கூட கோபுரம் என்றல்ல, தன் தலைக்கு மேலே வெறும் கீற்றுக் கூரை கூட வேண்டாமென மறுத்து, வானமே கூரையாகக் கொண்டு வேண்டும் வரமளித்து வருகிறாள். காண் பதற்கு உக்கிர வடிவம். அருள்பாலிப்பதில் அன்னையின் சொரூபம்.



உறையூரில் வெக் காளி வடக்கு நோக்கி வீற்றிருக்கிறாள், சற்று ஆக்ரோஷ வடிவம் ஆயினும், அம்மன் அமைதி உருவம். நாகம் மற்றும் அக்னிச் சுவாலையுடன் கூடிய கிரீடம். அதன் கீழே நம்மைக் கருணையுடன் நோக்கும் இருவிழி கள். கோரைப் பற்கள். இருந்தும் சீற்றம் இல்லை. சினம் துளிர்த்துச் சிரிக்கும் முகம், சிவந்த வாய். கரங்கள் நான்கு. மேற்கரங் களில் வலது புறம் உடுக்கை. இடது புறம் பாசம். கீழ் வலது கரத்தில் சூலம். இடது கரத்தில் கபாலம்.



வலது காலை மடித்து வைத்து, இடது காலைத் தொங்கவிட்டு அரக்கனை அந்தக் கால் பாதம் கொண்டு மிதித் துக் கொண்டிருக்கிறாள் வெக்காளி. பொதுவாகவே அம்மன், வலது காலைத் தொங்கவிட்டே அமர்ந்தி ருப்பாள். மதுரையில் கால் மாற்றி நடனமாடிய நடராசர் போல, இங்கே கால் மாற்றி வீற்றிருக் கிறாள் வெக்காளி.

இதற்கும் ஒரு விளக்கம் சொல்லப்படுகிறது. வலது காலை மடித்து இடது காலைத் தொங்க விட்டி ருப்பது சுகாசனம். இதில் மங்களப் பலன்கள் அதிகம். இடது காலை மடித்து வைத்து வலது காலைத் தொங்க விட்டிருப்பது வீர ஆசனம். ஆக, சுகாச னத்தில் வீற்றிருக்கும் வெக்காளி, வேண்டுவோர்க்கு வேண்டும் வரமளித்து வருகிறாள். இவள் அமர்ந்திருக்கும் இடம், சிலப்பதிகார கண்ணகி அமர்ந்து எழுந்து சென்ற பகுதி எனக் கூறப்படுகிறது. சோழ மன்னன் நெடுங்கிள்ளியின் மகனான பெருநற்கிள்ளி என்பவனால் கட்டப்பட்ட பத்தினிக்கோட்டமே இத்திருக்கோயில் பகுதி எனவும் சொல்லப்படுகிறது.



# பத்தினிக்கோட்ட வெக்காளி!

# ஸின்த்தால் சின்ன பேக்

# இப்போது ரூ.6-ல்

அம்மா சொல்றாங்க இது சருமத்துக்கு நல்லதுன்னு
மேலும் அப்பா சொன்னாங்க அற்புதமான
நறுமணமுள்ளதுன்னு டாக்டர் ஆன்ட்டி சொன்னாங்க
இதை எல்லோரும் உபயோகிக்கலாம்னு. அதனால்தான்
ரூ.6/-ல் நான் பெற்றேன் என்னோட சின்ன ஸிந்தால்






தலைமுறை தலைமுறையாக உங்கள் ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட்



# வெந்நீர் அபிஷேகப்ரியன்!

**பூலோக வைகுண்டம் ஸ்ரீரங்கம். வைணவ ஆலயங்களின் தலைநகரம் இது. இங்கு துயில்கொள்ளும் பெருமாள் பெரிய பெருமாள். கோயிலும் மிகப்பெரியது. கோயில் பற்றித் தெரிந்ததும், தெரியாததும்...**



* கோயிலுக்கு ஏழு பிராகாரங்கள். இருபத்தொரு கோபுரங்கள். ஏழு பிராகாரங்களின் உள்ளே மொத்தப் பரப்பு நூற்று ஐம்பத்தாறு ஏக்கர்.

* நம்பெருமாள் சன்னிதி, தாயார் சன்னிதி, சக்கரத்தாழ்வார் சன்னிதி... என மூன்று பெரிய சன்னிதிகள். கூடவே ஐம்பத்தைந்து உப சன்னிதிகளையும் உள்ளடக்கியது இத்திருக்கோயில்.

* சோழர், நாயக்கர்கள் கால மற்றும் கிருஷ்ண தேவராயர் கால கட்டிடக் கலை மற்றும் சிற்பக் கலைக்கு மிகச் சிறந்த சான்று. பல நூற்றாண்டுகளாக பல்வேறு மன்னர்களால் பல காலகட்டங்களில் ஒவ்வொரு பகுதியாகக் கட்டி வடிவமைக்கப்பட்டுள்ளது.

* தமிழ் மாதங்களில் ஒவ்வொரு மாதத்திலும், உற்சவம் உண்டு. வருடத்தில் இருநூறு நாட்களுக்கும் மேலாக உற்சவ தினங்களே. மார்கழி மாதத்தில் வைகுண்ட ஏகாதசி, மிகப் பெரும் திருவிழா.

* தை பிரமோத்சவம், பங்குனி பிரம்மோத்சவம் மற்றும் சித்திரை பிரம்மோத்சவம் என வருடத்துக்கு மூன்று பிரமோத்சவங்கள் நடைபெறுவது வைணவ ஆலயங்களில் இங்கு மட்டுமே.

* நம்பெருமாளுக்கென சாத்தப்படும் மாலைகளில் தொடுப்பதற்கு பூக்கள் பறிப்பது தொண்டரடிப்பொடியாழ்வார் நந்தவனத்தில். இந்த நந்தவனப் பூக்கள் விற்கப்படுவது இல்லை.

* பூப் பறிப்பவர்கள் தங்கள் வாய் மற்றும் மூக்குப் பகுதிகளை வெள்ளைத் துணியால் மூடியபடிதான் பூப் பறிக்க வேண்டும். தும்மல் எச்சிலும், மூச்சுக் காற்றும் பட்டுவிடக் கூடாதாம்.



* நம்பெருமாளின் பாண்டியன் கொண்டையும், கிளி மாலையும் மிக அழகானவை. கிளி மாலையுடன் நம்பெருமாளை வருடத்தில் நான்குமுறை மட்டுமே தரிசிக்க முடியும். மோகினி அலங்காரத்தன்று நாச்சியார் திருக்கோலம். தெப்போற்சவம், கண்ணன் பிறந்த நாளன்று உறியடி, தைப்

பொங்கல் - ஆகிய தினங்களில்.

✱ பூவுலகின் பேரழகன் நம்பெருமாள். உற்சவ விழாக்களின் புறப்பாடு காலங்களில் நம்பெருமாளின் திருக்கன்னத்தில் திருஷ்டிப் பொட்டு வைத்துவிடுவது உண்டு.

✱ சயனித்திருக்கும் மூலவரை தரிசிக்கும்போது முதலில் பாதம் பார்த்து தரிசிக்க வேண்டும். திருவடியைக் கண்ணுற்ற பின்னரே திருமுகம் காண வேண்டும். மூலவருக்கு ஆவணி மாதம் தைலக்காப்பு சாற்றப்படும். அப்போது திருவடி சேவை இல்லை.

✱ பெருமாளுக்கு தினசரி பூஜா காலங்களுக்கான பிரசாதம் தயாரிப்பது தற்போது மண்பாண்டங்களில்தான். ஒருமுறை உபயோகித்த மண்பானையை மறுமுறை உபயோகிப்பது கிடையாது.

✱ மாசி கருட சேவை மிகவும் பிரசித்தம். நகரமே திரண்டு நிற்கும். உள்ளூர், வெளியூர் பக்தர்கள் என திருவிழாக் கூட்டம். மாசி கருடனைச் சேவித்தால், காசிக்குப் போய் வந்த பலன் கிட்டும் என்பது ஐதீகம்.

✱ பங்குனி உத்திரத்தன்று, ஒரே சிம்மாசனத்தில் நம்பெருமாளும் தாயாரும் மிக அருகருகே எழுந்தருளியிருப்பார்கள். வருடத்தில் ஒருமுறை மட்டுமே இது நடைபெறும். இது சேர்த்தி சேவை.

✱ வைகாசி மாதம் ஒன்பது நாட்கள் வசந்த உற்சவம். சக்கரத்தாழ்வார் சன்னிதி வடக்கே நீண்டு விரிந்துள்ளது அந்த நந்தவனம். நடுவே நீராழி மண்டபம். நீர் நிரம்பிய ஆழிக்கு அப்பால் மைய மண்டபத்தில் நம்பெருமாள். குளிர்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்? மாலை எழுந்தருளி இரவு கருவறை சென்றடைவார் ஏகாந்த எம்பெருமாள்.

✱ உற்சவர் திருமேனிக்கு திருமஞ்சன காலங்களில் அபிஷேகத்தின்போது பால், தயிர் மற்றும் இளநீர் உட்பட திருமஞ்சன திரவியங்கள் ஏதும் சேர்ப்பதில்லை. முக்கிய திருமஞ்சன நாட்களில் நம் பெருமாளுக்கு வெந்நீர் அபிஷேகம் மட்டுமே.

✱ அந்த வெந்நீரில் மிக உஷ்ணம் ஆகாது. கை பொறுக்கும் அளவிலான இளஞ்சூட்டில் இருக்க வேண்டும். விரல் விட்டு ஒருவர் சோதித்த பின்னரே, நம்பெருமாளுக்கு வெந்நீர் அபிஷேகம் நிகழும்.

✱ வெந்நீர் அபிஷேகத்தின்போது ஏழெட்டு முறை கைலி (லுங்கி) மாற்றிக் கொள்வார் எம்பெருமாள். ஒவ்வொரு முறையும் ஈரமாகிப் போகும் கைலியைப் பிழிந்தெடுத்து, அருகிலிருக்கும் பக்தர்களுக்கு தீர்த்த பிரசாதம் தருவார்கள் அரையர்கள். அது ஈர வாடை தீர்த்தம்.

தகவல் உதவி:
**சுந்தர் பட்டர்**







## புத்தாண்டு வாழ்த்துக்கள்!
## மகிழ்வித்து மகிழுங்கள்!!

### வேதாரண்யம் மகளிர் தொண்டு நிறுவனம்

**Kasturba Gandhi Kanya Gurukulam, Vedaranyam - 614 810, Tamilnadu, India.**

# கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலத்திற்கு

**(A Tax Exempt, Non Profit Seculer Rural Charitable Women Welfare Organization, Since 1946)**

### உதவுங்கள்

63 ஆண்டுகளாய் அன்னதானம், அபயதானம், வஸ்திரதானம், சாஸ்திரதானம், வித்யாதானம், ஔஷததானம், கன்னியாதானம், கோசம்ரட்சணம் ஆகியவற்றை ஏழை, எதிலி பெண் குழந்தைகளுக்காக நிகழ்த்தி ஆதரிதது, அவர்களுக்கு வாழ்க்கையில் மகிழ்ச்சி, பிடிப்பு ஏற்படுத்தி தரும் அறநிலையத்திற்கு உதவுங்கள். தினசரி 6 வேளை பிரார்த்தனை, லலிதா சகஸ்ரநாமம் பாயாஸ நிவேதனம், "வேண்டுவோர் வேண்டுவதே ஈவான் கண்டாய்" வேதாரண்யேஸ்வரருக்கு ருத்ராதிரிசதி, கற்கண்டு பால் நிவேதனம், பால் அபிஷேகம், வனதுர்க்கைக்கு பால் அபிஷேகம் ஆகியனவும், வாரந்தோறும் மஹாத்மா காந்தியைச் சுட்ட வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு மனித நேயம் வளர்க்கும் சர்வமதப் பிரார்த்தனையும் நடைபெறுகிறது. தீபாவளி, பொங்கல், மாட்டுப் பொங்கல், ஸ்ரீ ஜெயந்தி, நவராத்திரி கொலு, கிருஸ்துமஸ், மீலாது விழா, தேசிய நாட்களில் ஊர்வலங்கள், மார்கழி பஜனை ஆகியன கொண்டாடப்படுகின்றன.

| ராஜாஜி திறந்து வைத்த அணையா அடுப்பு நமது அன்னபூர்ணாலயத்தின் | |
|---|---|
| ◆ ஒருநாள் உணவுச் செலவு ( 4 வேளைகள் ) ( 600 பேர் ) | ரு.20,000/- |
| ◆ ஒரு மாணவிக்கு ஒரு ஆண்டிற்கு (உணவு, உடை, கல்வி ) செலவு | ரு.10,000/- |
| ◆ குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரு.6,00,000/- |
| ◆ ஒரு மாணவிக்கு ஒரு ஆண்டிற்கு ஆகும் பராமரிப்பு செலவை வைப்பு நிதியாக வைத்து வட்டி மூலம் தொடர்ந்து ஏற்று ஆதரிப்பதற்கு | ரு.1,00,000/- |
| ◆ பிரஞ்சு நாட்டவர் நன்கொடை 20 படுக்கை கொண்ட மருத்துவமனை பராமரிக்க 1 மாதத்திற்கு | ரு.30,000/- |
| ◆ வினோபா அடிகள் தொடங்கி வைத்த கோசாலையில் 50 பசுக்களைப் பராமரிக்க ஒரு நாளைக்கு | ரு.2,500/- |





எவ்வளவு சிறிய தொகையானாலும் ஏற்று கொள்கிறோம்.


**கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம்**
வேதாரண்யம் - 614 810, நாகை மாவட்டம்,
தமிழ்நாடு, இந்தியா
Ph : (04369) 250011, 250027, 250017
தந்தி : குருகுலம், வேதாரண்யம்.
email : gurukulamvdm@yahoo.co.in
gurukulamvdm@gmail.com website : www.gurukulam.org


வெளிநாட்டு நன்கொடை பெற மத்திய அரசு FCRA அனுமதி எண் : **075960069**
[illegible]
[illegible]
Help KGKG Avail 80G

கொடுத்தால் வரும்: **Give and spend God will send**

முத்துராஜன் முதல் சம்பளத்தை மிகுந்த மகிழ்ச்சியோடு எண்ணிக் கொண்டிருந்த போதுதான் அந்தச் செய்திக்காக, அவனது செல்ஃபோன் சிணுங்கியது.

நல்லவேளையாய் ஃபோனை சைலன்ஸில் வைத்திருந்ததால் வெறும் அதிர்வுகளை மட்டுமே அவனால் உணர முடிந்தது. அலுவலகம் என்றாலே அவனது செல்ஃபோன் இப்படித்தான்.

நான்காவது முறையும் வந்துபோது அழைப்பை எடுக்கப் பரபரப்பானான். என்னமோ ஏதோவென்ற உள்ளுணர்வே அவனது படபடப்பைக் கூடுதலாக்கி இருந்தது.

''வணக்கம்'' என்றான்.

எதிர்முனையில் யாராக இருந்தாலும் இவன் இப்படித்தான் வணக்கம் சொல்வான். இதுவே வீடாய் இருந்து, இந்த நேரத்துக்கு 'வணக்கம்' என்று இவன் சொல்லி இருந்தால், சிரிப்பலைதான் எழுந்திருக்கும். அதுவும் அக்கா பிள்ளைகள்



# அம்மாவின்

என்றால் கேட்கவே வேண்டாம்.

இவனுக்கு எப்போது ஃபோன் வரும், வாரலாம் எனக் காத்திருப்பார்கள். வந்ததும் 'வணக்கம்' என்றாலே போதும். 'இந்தா... வந்துட்டாருடா... உம் மாமன் செய்தி வாசிக்க...'

அம்மாதான் சிரிப்பு வெடிக்கு முதல் நெருப்பை வைப்பாள். வெடிச் சத்தம் வீடு முழுவதும் பரவும்.

'மாமா...! நீ இப்படி செய்தி வாசிக்கறதை நிறுத்தவே மாட்டியா...?' வீடு மறுபடியும் தன் சுவர்களில் மோதப் போகும் சிரிப்பலைகளின் சந்தோஷ உணர்வுகளைத் தாங்கிக் கொள்ளத் தயார் நிலையில் இருக்கும்.

இப்போது அவன் தப்பித்தான் என்றே சொல்லலாம்.

அழைப்பு வீட்டில் இருந்து வருகிறது. எடுத்தால் கிண்டல் வருமோ என்ற யோசனையே

# ஆசை!



ஆங்கரை பைரவி

சிரிப்பை வரவழைத்தது. ஒதுக்கி வைத்து விட்டு அழைப்பை எடுத்தான் முத்து ராஜன்.

''வணக்கம்'' என்றவனுக்குப் பதிலே இல்லை.

''வணக்கம்...'' மறுபடியும் பதில் இல்லை. எதிர்முனையில் அழுகைச் சத்தம் கேட்டது.

'யாராய் இருக்கும்?' முத்துராஜன் திடுக்கிட்டான். பயம் மெல்ல உடம்பு முழுவதும் ஊடுருவ ஆரம்பித்தது. அந்தப் பயத்தாலேயே எதிர்முனை யில் அழும் குரல் யாருக்குரியது என் பதை அனுமானிக்க முடியாமல் திணறி னான்.

''யாரு...?'' பலவீனத்தில் மூழ்கிய குரலில் கேட்டான்.

''தம்பி...! முத்துராசு... நான் அக்கா பேசறேண்டா...''

''சொல்லுக்கா...ஏன் அழறே...? உங்க வூட்டுக்காரரு வழக்கம்போல தண்ணியப் போட்டுக்கிட்டு கிடக்காரா...? மறுபடி யும் ஆஸ்பத்திரி செலவு வச்சுட் டாரா...?''

''அதெல்லாம் இல்லடா சாமி. அம்மா செத்துப்போச்சுடா...'' அக்காவின் அழுகை அதிகமானது.

''என்னக்கா உளர்றே...? முந்தாநேத்து கூடப் பேசினேன். நல்லா இருக்குறதா சொல்லுச்சே... உழவர் அட்டைக்காக ஃபோட்டோ எடுக்கப் போயிட்டு வந் தேன்னு சொல்லுச்சு. நான்கூட சத்தம் போட்டேன். நூறு நாள் வேலைக்கு நீ போகத்தான் வேணுமான்னு திட்டி னேன்கா...''

''இப்பத்தாண்டா எனக்குச் செட்டியார் கடையில இருந்து ஃபோன் வந்துச்சு. உங்கண்ணன்தான் பேசினான். நேத்து அன்பிலு வரதராஜ பெருமாள் கோயில்ல ஏதோ விசேஷம் போலிருக்கு. போயிட்டு, லால் குடிக்கு பஸ் ஏறும்போது தலை சுத்தி கீழே விழுந்துடுச்சாம். அந்த இடத்துலயே உசிரு போயி டுச்சாம்டா.''

பெரும் அலையாய் ஒரு புலம்பல் மனத்துக்குள் மோதி யது. அந்த வலிகளைச் சுமந்த படியே அக்காவிடம் பேசி னான்.

''அக்கா...! அண்ணவிடம் சொல்லி ஆக வேண்டியதைப் பாக்கச் சொல்லு. நீ சீக்கிரம் புறப்பட்டு அங்கே போயிடு. நான் வந்து பார்த்துக்கலாம்னு இருந்துடப் போறான். எங்கே விடி யுதுன்னு நான் வந்துடுறேன்கா...''

**அ**லுவலகத்துக்கு விடுப்பு எழுதிக் கொடுத்துவிட்டு கோயம்பேடு வந்தான். திருச்சி பஸ் பிடித்து உட்கார்ந்தபோது

**அட... அப்படியா!**



திருச்சி-தஞ்சாவூர் சாலையில் உள்ள காந்தி மார்க்கெட்தான் திருச்சி மாவட்டத்தின் மிகப் பெரிய காய்கறி மார்க்கெட். இதற்கு மயிலம் சந்தை என்று இன்னொரு பெயரும் உண்டு. இந்த மார்க்கெட்டைத் திறந்து வைத்தது யாராயிருக்கும்? ஆமாம்... நம் தேசப்பிதா காந்தியடிகள்தான்.

- **இரா.கணேசன்**

## தெரியுமா செய்தி!

எழுத்திலும் ஆட்சி நிர்வாகத்திலும் இங்கிலாந்து மக்களை மயக்கிய பிரதமர் வின்ஸ்டன் சர்ச்சில். ஆனால், அவரை மயக்கியது திருச்சி உறையூர் சுருட்டுதான். கையில் பேனாவும், வாயில் உறையூர் சுருட்டும் இருந்துவிட்டால் மனிதர் ஏக குஷியாக எழுதத் துவங்கிவிடுவாராம்!

- இரா.கணேசன்



இரவு எட்டரையாகிவிட்டிருந்தது. வயிறு உணவு கேட்டது. மனதுதான் அந்த நிலையில் இல்லை. அம்மா, இவன் பசியோடு இருப்பதை தாங்கிக் கொள்ள மாட்டாள்.

'தம்பி... அம்மாவ நினைச்சுக்கிட்டு வயிறைக் காயப் போடாதடா. மெட்ராசுல இருந்தாலும் தினமும் நீ பேசறதே பக்கத்துல இருக்கற மாதிரிதான் தோணுது. தினமும் என்ன சாப்பிட்டேன்னு சொல்லணும் புரியுதா...?'

சரியாய் இரவு எட்டரை மணிக்கெல்லாம் அம்மா இப்படி ஒரு உரையாடலை ஃபோனில் நிகழ்த்துவாள். இனி கேட்கக்கூட ஆள் இல்லை. இருந்த ஒரு பிடிமானமும் போய்விட்டது என்கிற வேதனையே கண்களைக் கலங்க வைத்தது.

பேருந்து புறப்பட்டது.

அம்மாவின் ஆசைகளைப் படிப்படியாய் நிறைவேற்றுவதாய்ச் சொல்லி இருந்தான் முத்துராசன்.

சென்னையில் இந்தத் தனியார் கம்பெனியில் வேலை கிடைப்பதற்கு முன்னால் வயல்வேலைக்குத்தான் சென்றான். அம்மாவும் அவ்வப்போது களை எடுக்க, உரம் வைக்க எனப் போவாள். முத்துராஜன் தடுத்தாலும் நிற்க மாட்டாள்.

அந்தக் காலத்து மனுஷி அம்மா. பிறந்து வளர்ந்த கதையை வருஷம் முச்சூடும் புலம்பித் தீர்ப்பாள். அதில் அவளுக்கு ஒரு சுகம். வேதனை கலந்த ஆனந்தம். சொல்லும்போது சிரிப்பாள். முடிக்கும்போது இரண்டு சொட்டு கண்ணீராவது விட்டிருப்பாள்.

இந்தப் புலம்பல் அண்ணனுக்குச் சுத்தமாகவே பிடிக்காது. இந்தப் புலம்பலுக்காகவே, திருமணமானதும் தனிக் குடித்தனம் சென்றுவிட்டான். முத்துராஜன்தான் அம்மாவின் உலகமாய் மாறி இருந்தான்.

அந்த உலகத்தின் வெளிச்சமே அம்மாதான் என முத்துராஜன் நினைத்திருந்தான்.

அந்த வெளிச்சம் அணைந்த செய்திதான் கழுத்தை நெறிப்பதுபோல இருந்தது.

"தம்பி...! எங்க அப்பா என்னை பையனா வளர்த்தாரு. 'சின்னப் பொண்ணு..! நீ ஆணா பிறந்திருந்தா அரசு கட்டி ஆளுவே. பொண்ணாப் பொறந்துட்டியே தங்கம்'னு புலம்புவாரு. எனக்கு ஃபோட்டோ எடுத்துக்கணும்னு ரொம்ப ஆசை. ஆனா உங்க தாத்தன் கடைசிவரைக்கும் என்னை எடுத்துக்கவே விடல. 'ஆயுசு குறைஞ்சுடும் சின்னப் பொண்ணு'னு மிரட்டுவாரு. பொறந்த வூட்டுல பொதைச்ச ஆசைய புருஷன் வீட்டுக்கு வந்ததும் தோண்டி எடுத்து உங்கப்பன்கிட்ட சொன்னா சிரிக்கறாருடா... கடைசி வரைக்

குமே அந்த ஆசை நிறைவேறலடா...''

இந்தப் புலம்பலை அண்ணனால் கேட்கவே முடியாது. நெளிவான்.

''யம்மா! உன்னோட காலத்தையே புலம்பாதம்மா. இப்ப என்ன... உனக்கு ஃபோட்டோ எடுக்கணும். அவ்வளவு தானே. எடுத்துடலாம் விடு'' என்பான்.

ஆனால், அம்மாவுக்கு ஒரு பழக்கம் இருந்தது. ஃபோட்டோ எடுக்கும் நேரத்தில் கேமரா வெளிச்சத்துக்கு கண்கள் கூசும். மூடி விடுவாள். ஃபோட்டோ கைக்கு வந்ததும் பார்ப்பாள். வீடு முழுவதும் சிரிப்பும் கும்மாளமுமாய் இருக்கும்.

''என்னம்மா... தூங்கிட்டியா...?'' அண்ணன் குரல்தான் முதலில் புறப்படும்.

''என்னடா பண்றது...? லைட்டு வெளிச்சம் ஏதோ கண்ணைக் குத்த வர்ற மாதிரி இருந்துச்சா... மூடிட்டேன். ஒரு ஃபோட்டோவாவது நல்லா வருமான்னு பாக்குறேன். வர மாட்டேங்குது. செத்தன்னிக்குத்தான் வரும் போலிருக்கு.''

வீடு கேலி செய்தாலும், அம்மாவின் ஆசை குறையவே இல்லை. கல்யாணம், காதுகுத்து, வளைகாப்பு என்று எந்த விசேஷங்களுக்குச் சென்றாலும் ஃபோட்டோவுக்கு போஸ் கொடுப்பது என்றால் கொள்ளை ஆசை. அந்த ஆசையெல்லாம் ஃபோட்டோவைப் பார்க்கும்போது கறுத்துப் போகும், கருகியும் போகும்.

''டேய்... எம்புள்ள முத்துராசு வேலைக்குப் போய் ஒரு நல்ல காமிரா வாங்கி என்னை ஃபோட்டோ எடுப்பாண்டா. அப்போ நீ வேணும்னா பாரு. நான் கண்ணு ரெண்டையும் திறந்துக்கிட்டு கம்மா ஜம்முனு இருப்பேன். என்னடா முத்துராசு..?''

''ஆமாம்மா... நீ கவலைப்படாதே...'' முத்துராஜன் சமாதானப்படுத்துவான்.

எத்தனை சமாதானம் சொன்னாலும் அம்மாவுக்கு அந்த ஃபோட்டோ ஆசை ஒரு குறையாகவே இருந்தது.

அந்தக் குறையும் நிரந்தரமாகிவிட்டதை நினைக்க நினைக்க அழுகை வெடித்தது. அடக்க முடியாமல் தவித்தான். ஜன்னலோர இருக்கை என்பதால் அப்படியே பேருந்து பக்கவாட்டுக் கண்ணாடியில் தலையைச் சாய்த்துக் கொண்டு சாலையைப் பார்த்தான். ஊருக்குப் போகிற வேகம் அவனை விட அந்தப் பேருந்துக்குத்தான் அதிகம் போல. அத்தனை வேகம்.

**வீ**டு வந்து சேர்ந்ததுதான் தாமதம். அண்ணன், அக்கா, குழந்தைகள் என எல்லோரும் ஒரு பாட்டம் முத்துராஜனைக் கட்டிக்கொண்டு அழுது ஓய்ந்தார்கள். பேருந்திலேயே அழுது தீர்த்து இருந்த

**எண்ணிப் பாருங்க!**



'பூலோக வைகுண்டம்' என்றழைக்கப்படும் ஸ்ரீரங்கநாதப் பெருமாள் கோயில்தான் திவ்யதேசங்களில் முதன்மையானது. பிரம்மாண்டமும் விஸ்தாரமும் கொண்ட அக்கோயிலின் ஆயிரங்கால் மண்டபத்தில் உள்ள தூண்களின் எண்ணிக்கை 953தான். நேரமும் பொறுமையும் இருந்தால் நீங்களும் எண்ணிப் பார்க்கலாம்.

- இரா.கணேசன்

தால் அவனால் அமைதியாய் மட்டுமே இருக்க முடிந்தது.

அண்ணன் சொந்த பந்தங்களுக்கெல்லாம் தகவல் சொல்லியிருந்தான். பாடை கட்டவும், பூவுக்கும், மேளத்துக்கும் பணம் கேட்ட அண்ணனைப் பார்த்தான். அந்தப் பார்வை அண்ணனைக் குத்தியிருக்க வேண்டும். முன்பக்கம் திரும்பிக் கொண்டான்.

''எங்கையில பணம் இல்லடா முத்து ராசு. உங்க அண்ணிதான் நூறு நாள் வேலைக்குப் போய் குடும்பத்தைக் காப்பாத்தறா..''

முன் பக்கம் திரும்பிய அண்ணன் வார்த்தைகளைப் பின்பக்கம் நின்ற முத்துராஜனிடம் கொட்டினான். பொறுக்க முடியாத வார்த்தைகள் தான். கேட்க இப்போது நேரமில்லை முத்துராஜனுக்கு.

தன் சட்டைப்பையில் வைத்திருந்த தனது முதல் மாதச் சம்பளத்தை அப்படியே அண்ணனிடம் தந்தான்.

''தம்பி... போஸ்டரு அடிக்கணும்டா. அம்மா ஃபோட்டோதான் நல்லதா ஒண்ணுகூட இல்லை...''

''வேண்டாம்ணே. கண்ணை மூடிக்கிட்டு இருக்கும். அது எதுக்கு... பாவம் அம்மாவோட ஆசைதான் நிறைவேறாமலே போயிடுச்சு...'' சொல்லும் போதே ஒரு விசும்பல் வெளியேறியது முத்துராஜனிடம்.

''ஏ...அத்தே... நீ போயிட்டியா? இரண்டு நாளைக்கு முன்னாடி இந்நேரமெல்லாம் ராணியாட்டம் போஸ் குடுத்தியே... போயிட்டியா பாவி மகளே...'' அம்மாவைத் தவிர எல்லோரும் அவனைப் பார்த்தனர். பக்கத்துத் தெரு லட்சுமிதான் மார்பில் அடித்துக்கொண்டு அழுதாள். முத்துராஜனிடம் கைகளைப் பிடித்துக்கொண்டும் அழுதாள்.

''தம்பி...! முந்தா நேத்துக்கு மொத நாளு சாயந்தரம்தான் லால்குடியில போய் ஸ்டூடியோவுல பாஸ்போட்டு சைஸ்ல ஃபோட்டோ எடுத்துட்டு வந்தோம்பா. உழவர் பாதுகாப்பு அட்டையில ஒட்டணும்னு பஞ்சாயத்துத் தலைவரு சொல்லி இருந்தாரு. போனோம். ராணி மாதிரி நின்னுச்சு. யம்மா பாஸ்போட்டுக்கு போஸ் எதுக்கும்மா... அசையாம உட்காரு போதும்னாரு ஃபோட்டோ எடுக்கறவரு. உங்கம்மாவுக்குச் சிரிப்புத் தாங்கல. பாருப்பா உங்க அம்மாவ...''



“ உலகத்தின் வெளிச்சமே அம்மாதான் என்று முத்துராஜன் நினைத்திருந்தான். ”

மணிபர்ஸில் இருந்த ஃபோட்டோவை எடுத்து முத்துராஜனிடம் நீட்டினாள்.

வாங்கிப் பார்த்தவன் வாய்விட்டு அழுதான். பார்த்துப் பார்த்து தலையில் அடித்துக்கொண்டான். அவனால் அழுகையைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை.

முத்துராஜன் கதறி அழுவதை ஃபோட்டோவில் இருந்த அம்மா பார்த்துக் கொண்டிருந்தாள் புன்னகையோடு. ○

# "காட்ரீனா:

இன்று பாலிவுட்டில் டாப் ஹீரோயின் காட்ரீனா கைஃப்தான்! நெடு நெடு உயரம், பளபள நிறம், கிறுகிறு அவுட் ஃபிட்... என காட்ரீனா வெற்றித் தேரில் வலம் வந்து கொண்டிருக்கிறார்.

பிறந்தது ஹாங்காங்கில். வளர்ந்தது லண்டனில். ஏழு சகோதரிகளுடன்(!) பிறந்த காட்ரீனா லண்டனில் மாடலாக இருந்திருக்கிறார். ஒரு இந்தி இயக்குநர் பார்வையில் பட்டு 2003-ல் 'பூம்' படத்தில் அறிமுகமானார். படம் ஃப்ளாப். காட்ரீனா மனம் தளரவில்லை. மெள்ள மெள்ள பல விளம்பரங்களில் மாடலாக சான்ஸ்.

பிறகு திடீரென ஒன்றன் பின் ஒன்றாக அக்ஷய் குமாருடன் நடித்த படங்கள் சக்கைப்போடு போட, காட்ரீனா டாப் ஹீரோயின்களின் வரிசையில்!

'ஐஸ் Vs காட்', '35 Vs 25' என்ற ரீதியில் ஐஸுடன் காட்ரீனாவை கம்பேர் பண்ணிப் பார்க்கிறார்கள் வலையில். பல விளம்பரங்கள் ஐஸிடமிருந்து இன்று காட்ரீனாவிடம். பார்பி, நக்ஷத்திரா போன்ற பெண்கள் விரும்பி உபயோகப்படுத்தும் பொம்மை மற்றும் வைர நகைகளின் மாடல் காட்ரீனா.

''என்னைத்தான் அந்நிறுவனம் (பார்பி) நாலு வருடங்களாகத் துரத்திக் கொண்டிருக்கிறது. என்னிடம் டேட்ஸ் இல்லை. நான் வேண்டாமென்று சொன்னதுதான்...'' என்கிறார் பல பன்னாட்டு நிறுவனங்களின் பிராண்ட் அம்பாஸடரான ஐஸ்!

க்ளாமரான ரோலில் ஜில்லென்று வந்து கொண்டிருந்த காட்ரீனாவுக்கு, திடீரென ஒரு மாறுபட்ட ரோல் 'ராஜ்நீதி' (அரசியல்) என்ற சினிமாவில். சோனியா



**சோ**னியாவுக்குப் போட்டியாக, அவரது மாமியாரும் மறைந்த முன்னாள் பிரதமருமான இந்திரா காந்தி களமிறங்குகிறார்! ஹாலிவுட்டில் டெலிவிஷன் மற்றும் சினிமா தயாரிப்பாளரான க்ருஷ்ணா ஷா இந்திராவின் நினைவாக 'மதர் - தி இந்திரா காந்தி ஸ்டோரி' என சினிமா எடுக்கிறார். இதில் மாதுரி தீட்சித்துக்கு டைட்டில் ரோல். ஏக் தோ தீன் என ரகளையாக ஆடி, பத்து வருடங்களுக்கும் மேலாக நம்பர் ஒன் ஹீரோயினாக இருந்து தற்போது இரு குழந்தைகளுக்குத் தாயாக அமெரிக்காவில் அழகு அம்மாவாக இருக்கும் மாதுரியை சினிமா உலகம் விடுவதாகயில்லை.

க்ருஷ்ணா ஷா இயக்கும் இப்படம் இரு பாகங்களாக வெளிவர இருக்கிறது. முதல் பாகம் 2010 கடைசியில் ரிலீஸ் ஆகுமாம். கடந்த 23 வருடங்களாக ஸ்க்ரிப்ட் எழுதிக் கொண்டிருந்த க்ருஷ்ணா ஷா பெரிய பட்ஜெட்டில் எடுக்கவிருக்கிறார்.

சோனியாவா? இந்திராவா? ஜெயிக்கப் போவது யாரு என்பது சில மாதங்களில் தெரிந்துவிடும். இரண்டு பவர் ஃபுல் பெண்மணிகளின் ரோலில் இரண்டு பியூட்டி ஃபுல் நடிகைகள்!



# பியூட்டி டால்''





காந்தியின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு வெளிவரப் போகும் படத்தில் 'இந்து தேவி' என்ற ரோலில் காட்ரீனா! ''இது மகாபாரதத்திலிருந்து இன்ஸ்பயர் ஆனது. சோனியா காந்தியின் கதையல்ல... ஃபுல் அண்ட் ஃபுல் அரசியல் த்ரில்லர்'' என்கிறார் இயக்குநர் பிரகாஷ் ஜா. காட்ரீனாவின் க்ரிஸ்ப் காட்டன் ஸாரி மேக்கப்பைப் பார்க்கும்போது சோனியா கண்டிப்பாக நினைவுக்கு வருவார். அஜய் தேவ்கன், ரண்பீர் கபூர், நானா படேகர்... போன்ற ஹிட் நடிகர்களுடன் இதில் ப்ரியங்கா சோப்ராவும் உண்டு. அநேகமாக மேனகா காந்தி ரோல் (இன்ஸ்பயர்... எனப் படிக்கவும்) என்கின்றனர்.

விளம்பரம், சினிமா, இன்டர்நெட் என எல்லாத் துறைகளிலும் இன்று முன்னணியில் நிற்கும் காட்ரீனாவுக்கு சிறந்த நடிகையாக ராஜீவ்காந்தி விருது வேறு! காதிலிருந்து புகை பல நடிகைகளுக்கு. ஆசியாவிலேயே க்ளாமரான நடிகை என்ற ஆன்லைன் தேர்விலும் இவர்தான் நெம்பர் ஒன்!

சல்மான் கானின் கேர்ள் ஃப்ரெண்ட் எனக் கிசுகிசுக்கப்பட்டாலும் தைரியமாகப் பல ஹீரோக்களுடன் படம் பண்ணுகிறார். இவருடைய பர்த்டே கொண்டாட்டத்தின் போது சல்மான் - ஷாருக் கான் மோதல் விஸ்வரூபமெடுத்தது. பார்ட்டியில் நடந்த அந்தச் சண்டையை இன்றும் பாலிவுட் மீடியா அசை போடுகிறது.

'எப்படி இருந்த நான் இப்படி ஆகிட்டேன்?' என ரகசியமாக காட்ரீனாவே தம் கேரியர் கிராஃபை நினைத்து வியக்கிறாராம். லக்கி கேர்ள்!

**- லதா சேகர்**

# ஆசைதான் காரணம்!




பாபப புண்யத்துக்குக் காரணம் என்ன? அவற்றைச் செய்யாமல் நிறுத்த இஷ்டமிருக்கிறது; ஆனால் முடியவில்லை. ஒரு மரத்தைத் தழைக்காமல் செய்ய வேண்டுமானால் கிளைகளை வெட்டினால் முடியாது; அடிமரத்தை வேரோடு வெட்ட வேண்டும். வீட்டுக் கூரையிலே திரும்பத் திரும்பக் கறையான் புற்று உண்டாகிறது என்றால், மேலெழுந்த வாரியாக அந்தக் கூட்டைப் பெயர்த்தால் போதுமா? போதாது. இன்னோரிடத்தில் புற்று முளைக்கத்தான் செய்யும். கறையான் வைக்கும் தாய்ப்பூச்சியைப் பிடித்து அழித்தால்தான் புற்று எங்கும் எழும்பாமலே போகும். அதுபோல பாபத்துக்கு மூல காரணத்தை அறிந்து அதையே அழிக்க வேண்டும். பாபத்துக்கு மூலம் என்ன? கெட்ட காரியத்தினுடைய பலன்தான் பாபம். கெட்ட காரியம்தான் பாப மூலம். கெட்ட காரியம் எதனால் செய்கிறோம்? நமக்கு ஒரு வஸ்து வேண்டும் என்ற ஆசையிருக்கிறது. அதை அடைவதற்குக் குறுக்கு வழிகளில் போகிறோம். அது பாபம். அதாவது, பாபம் செய்யக் காரணம் ஆசை. ஒரு வஸ்து அழகாக இருந்தால் ஆசை உண்டாகிறது. நல்ல பதார்த்தங்களைக் கண்டால் நமக்கு வேண்டுமென்று ஆசை தோன்றுகிறது. அது நல்லது என்ற இச்சை உண்டாகிறது. இந்த இச்சையைப் பூர்த்தி பண்ணக் காரியங்கள் செய்கிறோம். இந்திரியங்கள் ஒன்றை அழகானதென்று அறிவதுதான் ஆசைக்குக் காரணம்.

இத்தனை நாழி நான் சொன்னதிலிருந்து ஏற்படுவது என்னவென்றால்:

நாம் செய்யும் பாபத்துக்கு உடம்பு தண்டனை. பாபத்துக்கு மூலம் கெட்ட காரியம். கெட்ட காரியத்துக்கு மூலம் ஆசை. ஆகையால் நம் கஷ்டம் அனைத்துக்கும் மூல காரணமாகிய ஆசையை நிவர்த்தி பண்ணினால்தான் நிரந்தரமான துக்க நிவர்த்தி உண்டாகும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்



# 33வது சென்னை புத்தகக் காட்சி

**செயின்ட் ஜார்ஜ் ஆங்கிலோ இண்டியன் மேல்நிலைப் பள்ளி**
**( பச்சையப்பன் கல்லூரி எதிரில் ), சென்னை-30**

## 30-12-2009 முதல் 10-01-2010 வரை

**வார நாட்கள் : பகல் 2.00 - இரவு 8.30**
**விடுமுறை நாட்கள் : காலை 11.00 - இரவு 8.30**

- ஆங்கிலம், தமிழ் மற்றும் இந்திய மொழிகளில் கோடிக்கணக்கான புத்தகங்கள்
- குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அனைவருக்குமான தலைப்புகளில்...
- சிந்தனைச் சிற்பிகளின் சிறப்பு மிகு சொற்பொழிவுகள்
- ஒரு லட்சம் சதுர அடியில் மிகப் பிரமாண்டமாய்...

**10% தள்ளுபடி**




தென்னிந்திய புத்தக விற்பனையாளர் மற்றும் பதிப்பாளர் சங்கம்

எண் 6, இரண்டாவது மாடி, சன் பிளாசா, ஜி.என். செட்டி சாலை, சென்னை-600 006 போன் 28155236

கலக்க வருதுப்பா

# கல்கி

ரீடர்ஸ் கெட் ரெடி

**திண்டுக்கல் மாவட்டத்து கற்கண்டு வாசகர்களே!**

## இப்ப உங்க ஊருக்கே வருது கல்கி டீம்...

- திக்கெட்டும் புகழ்பரப்பும் திண்டுக்கல் ஸ்பெஷாலிட்டி என்னென்ன?
- மனசை ரிலாக்ஸ் ஆக்கும் மகத்துவமான இடம் எது?
- குளுகுளு இடம் பற்றிய சூடான தகவல் எழுதலாமே...
- நெஞ்சை நிமிர வைக்கும் உங்க ஊர் பெருமை என்ன?
- மக்கள் மனத்தில் குந்திக் கொண்ட வி.ஐ.பி. யாரு?
- திண்டுக்கல் பூட்டு மாதிரி புத்தியை லாக் செய்ய எழுத்தாளர்கள் என்ன தருவீங்க?
- முட்டுக்கட்டை போடும் பிரச்னைகள் என்ன?
- வளம் சேர்ப்பதைப் புகழவும்... துயர் தருவதைக் களையவும்... இது நல்ல வாய்ப்பென்று பகிரங்கமா எழுதுங்க...

**வாசகர்களே...**

நீங்கதான் ரொம்ப முக்கியம். உங்க மாவட்டத்தைப் பத்தி நீங்க அனுப்புற தகவல்கள்தான் திண்டுக்கல் மாவட்ட ஸ்பெஷல் இதழ்களுக்கு அஸ்திவாரம்!

விவரங்கள் எதிர்ப்பக்கத்துல இருக்கே!




கொடைக்கானல் லேக்

ஆமாம்! உங்கள் திண்டுக்கல் மாவட்டத்துக்கு 'கல்கி' டீம், நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

**சில சிம்பிள் கண்டிஷன்ஸ்...**

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- திண்டுக்கல் மாவட்டத்தின்.... பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்
சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ் என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

# வர்றோம்!

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 09.01.2010**

**கலக்க வருதுப்பா கல்கி**
**திண்டுக்கல் மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

**ஹா**ர்ன் அடிக்கிறது. வண்டி புறப்பட இன்னும் அஞ்சு நிமிடம்தான். மேட்டுப்பாளையம் ரயில் நிலையமே ஆங்கிலப் படத்தின் க்ளைமாக்ஸ் காட்சி போல் பரபரத்தது. கிரிஜாவும் தேன்மொழியும் அவசரமாக பிளாட்ஃபாரத்தில் வந்து கொண்டிருந்தனர்.



அவர்கள் ஏறப்போகும் பெட்டியின் வாசலில் அதுவரை அந்தக் கணத்துக்காகக் காத்திருந்த சூர்யா, அவர்களைப் பார்த்ததும் பரபரப்பானான்.

அவன் திட்டம் இதுதான்.... இன்னும் சில நொடிகளில் அவள் அவனைப் பார்த்து அதிர்ச்சியில் விக்கித்து நிற்க, இவன் அவள் யாரென்றே தெரியாதவனாக ஒரு நிமிடம் குழம்பி, பின், 'பேச நேரமில்லை, டிக்கட் கன்ஃபர்ம் ஆகவில்லை' எனப் பொய் சொல்லித் தப்பித்து அவளிடமிருந்து செல் நம்பர் மட்டும் வாங்கிக்கொண்டு பிரிய வேண்டும்.

அதன்பிறகு இரண்டு நாள் கழித்து ஃபோன் செய்து வேலை பிஸி எனப் பொய் சொல்லி, இன்னும் இரண்டுமுறை அலைக்கழித்து... அதன் பிறகு ஐ லவ் யூ சொல்லித் திணற வைத்து மகிழ்ச்சியில் திக்குமுக்காட வைக்கவேண்டும். சூர்யா

வுக்குத் தெரியும், இப்படியெல்லாம் செய்யாவிட்டால் தேன்மொழியை அவ்வளவு சீக்கிரம் விழத் தட்ட முடியாது. அஞ்சு நிமிடம் அவளைப் பொருட்படுத்திவிட்டால்கூட போதும், ஆணவம் எனும் விஷக்கொடுக்கு அவள் கண்ணை மறைத்துவிடும்.

**அஜயன் பாலா**

என்ன இது அதிசயமா? அவன்தான், அவனேதான்....காலையில் மூச்சிறைக்க குன்னூர் சாலையில் யாரைப் பார்க்க ஓடினோமோ அதே முகம் இப்போது தன் எதிரே... அவனுக்கு உடல் படபடத்து

# பகல் மீன்கள்

**12**



இப்படியாக யோசித்துக்கொண்டு சூர்யா அவளை நோக்கி நடக்க, எதிர்த் திசையில் கூட்டத்தின் நடுவில் கிரிஜாவுக்குப் பின்னால் ஓட்டமும் நடையுமாக வந்த தேன்மொழி, இவனைப் பார்த்ததும் சட்டெனச் சிலையாகிப் போனாள்.

மகிழ்ச்சி எக்கச்சக்கத்துக்கு எகிறி, ஆச்சர்ய அதிர்ச்சியை உண்டாக்கியது.

''ஹேய் யூ .....''

தோழியின் குரல் கேட்டு கிரிஜா திரும்பினாள்

எதிரே வந்த சூர்யா ஒரு நிமிடம்

அவளை முழுவதுமாய் மறந்துவிட்ட வனைப்போலப் பார்த்தான். புருவங்களைச் சுருக்கி அவன் அவள் முன் நின்றது ஒரு நொடிதான். அந்த ஒரே ஒரு நொடியில் தேன்மொழியின் முகம் விருட்டென மாறியது. கண்கள் ரத்தமாகக் கொப்பளிக்கத் துவங்கின.

கிரிஜா அவளை, ''வாடி'' என இழுந்து அவள் மேல் கைவைக்க, சற்றும் எதிர்பாராவிதமாக தேன்மொழி ,

''யேயயயய்ய்ய்ய்ய்ய்ய்ய்.........''

எனப் பல்லைக் கடித்தபடி ரத்தக் காட்டேரி போல கிரிஜாவின் பக்கம் திரும்ப, கிரிஜாவுக்குத் தூக்கி வாரிப்போட்டது

சூர்யா இதனை எதிர்பார்க்கவில்லை.

அடுத்த நொடி சடாரெனத் திரும்பிய தேன்மொழியின் முகம், மூக்கு, புருவம், இமை அனைத்தும் துடிக்க, கழுத்து நரம்புகள் புடைத்துக்கொண்டு கைகால்களை இறுக்கியபடி சூர்யாவைப் பார்த்தாள்.

சூர்யா அவன் வாழ்நாளில் முன்னும் பின்னும் அப்படியொரு கணத்தை எதிர் கொண்டேயிருக்க முடியாது.

மீண்டுமொருமுறை தேன்மொழி, 'யேயயயய்ய்ய்ய்ய்ய்ய்ய்.........' எனக் கூச்சலிட்டபடியே சூர்யாவின் கழுத்தை இரண்டு கைகளாலும் பிடிக்கபோக, உடனே அக்கம்பக்கம் இருந்தவர்கள் தேன்மொழியைப் பிடிக்க, கிரிஜா சட்டெனச் சுதாரித்தவளாகப் பின்பக்கமிருந்து தேன்மொழியைக் கட்டியணைத்து ஸ்டேஷன் பக்கமாக இழுத்தாள். தேன்மொழி இன்னமும் விடாமல் சூர்யாவைப் பார்த்து ஆங்காரத்துடன் கத்த, கிரிஜா ஸ்டேஷனுக்குள் ஒரு பெட்டிக்கடை பக்கமாக தேன்மொழியைத் தரதரவென இழுத்துப்போக அவர்களைச் சுற்றிப் பெரும் கூட்டம் கூடிவிட்டது.

அருகிலிருந்த கிரிஜாவின் மேனேஜர் அனைவரையும் விலகச் சொல்ல, தேன்மொழியின் உடல் சட்டென பதற்றம் முழுவதும் வடிந்து மயங்கி கிரிஜாவின் கால்களிடையில் சரிந்து துவண்டது. கூடியிருந்தவர்களுள் மருத்துவரைப்போல இருந்த ஒருவர் கீழே குனிந்து தேன்மொழியின் நாடியைப் பிடித்துப் பார்த்து, ''ஒண்ணுமில்ல உள்ள கொண்டு போய் படுக்க வைங்க. சரியாயிடும்'' என்றார்.

அதற்குள் ஒருவர் சோடாவைக் கொண்டுவந்து முகத்தில் தெளிக்கப் போக, சட்டென அதை மறுத்த கிரிஜா உடனடியாக மேனேஜரை ஒருகை பிடிக்கச் சொல்ல இருவரும் கைத்தாங்கலாகத் தேன்மொழியைப் பத்திரமாகத் தூக்கிக்கொண்டு ரயிலை நோக்கி நகர்ந்தனர்.

தேன்மொழியைப் படுக்க வைத்த பின்தான் கிரிஜாவுக்குச் சட்டென அந்த இளைஞனின் முகம் ஞாபகம் வந்தது.

**கலை... கவிதை!**



தில்லைநகர் சாஸ்திரி ரோட்டில் அமைந்துள்ளது ஸ்ரீ சாரதாம்பாள் திருக்கோயில். இக் கோயிலில் அம்பாளுக்கு ஆடி மாதம் இரண்டாம் வெள்ளிக்கிழமை கண்ணாடி வளையல்களால் அலங்காரம் செய்வார்கள். ஒரு லட்சத்து இருபதாயிரம் வளையல்களால் செய்யப்படும் இந்த அலங்காரம் பார்ப்பவர்களைப் பிரமிக்க வைக்கிறது.

- டி.ஆர்.பரிமளரங்கன்

ரயில் புறப்படத் தொடங்க, கிரிஜா வாசலுக்கு ஓடிவந்து அவனைத் தேடினாள். காணவில்லை .

யார் அவன்? அவனைப் பார்த்ததும் இவளுக்கு ஏன் அப்படி ஒரு ஆங்காரம்? கிரிஜா யோசிக்க, ரயில் வேகம் பிடிக்கத் தொடங்கியது.

## நல்ல விஷயம்தானே!

மத்திய சிறையில் ஹரே கிருஷ்ணா இயக்கம் பக்தர்(கைதி)களிடையே மிகவும் பிரபலம். பகவத் கீதை வகுப்புகளும் தியான முயற்சிகளும் கைதிகளின் மனத்தில் அமைதியை நிறுவி வருகின்றன. சிறைச்சாலையில் ஆன்மிகம்... சிலாகிக்கப்பட வேண்டிய விஷயம்தானே!

**- கே.எம்.தினகரன்**



சூர்யா முழுமையாகக் குலைந்து போய்விட்டான். அவனது திட்டமிடுதலிலும் காரிய நுணுக்கங்களிலும் அவனுக்கு எப்போதுமே அசாத்திய நம்பிக்கை உண்டு. அது நம்பிக்கைகூட இல்லை. திமிர். எந்த உள்ளுணர்வையும் வெளிக்காட்டாமல், தன் எதிரே இருக்கும் மனிதனை முழுமையாக ஏமாற்றி, தன் வசப்படுத்தும் தந்திரத்தில் இதுநாள்வரை அவன் தோல்வியே சந்தித்தது கிடையாது. அதனால் உருவானதுதான் அந்தத் திமிர்.

ஆனால், அந்தத் திமிர் முதன்முறையாக தேன்மொழி விவகாரத்தில் அன்று மேட்டுப்பாளையம் ரயில் நிலையத்தில் முற்றாக முறிந்தது. திடீரென தேன்மொழி இப்படி ரியாக்ட் செய்வாள் என அவன் எதிர்பார்க்கவில்லை.

அன்று ரயில் நிலையத்தில் தேன்மொழி வீறிட்டதும், சட்டென அங்கிருந்து விலகி ஓரிடத்தில் மறைந்து பதற்றத்துடன் என்ன நடக்கிறது எனக் கவனித்தவன், ரயில் புறப்பட்டபின் அங்கேயே ஒரு நாற்காலியில் அமர்ந்து குமுறிக் குமுறி அழுதான். ஹீரோ போல நினைத்து எதையோ செய்யப் போய், கடைசியில் வில்லனாக மாறிவிட்டோமே எனும் குற்றவுணர்ச்சிதான் அவனை அழ வைத்தது. வைசாக்கில் கடைசியாக ஆட்டோவில் புறப்படும்போது ஒரு சிறுமியைப்போல அன்பு ததும்பப் பார்த்த அந்தப் பார்வை ஞாபகத்துக்கு வந்தது. அவ்வளவு மென்மையான ஒரு பெண்ணை இப்படியான மனக்கொந்தளிப்புக்குக் கொண்டு வந்து விட்டோமே என அவனது உள்ளம் நடுங்கியது.

திட்டமிட்டுத் தேன்மொழியை வலையில் வீழ்த்திக் காதலிக்க வைத்து, கல்யாணம் வரை அழைத்து வந்து, பின் ''இல்லை. நான் உன்னைக் காதலிக்கவில்லை... அனைத்தும் நாடகம்'' எனக் கைவிரிக்கும்போது அவள் குமுறியழுவாள். ஏமாற்றத்தால் துடிப்பாள். அப்போது அவளுக்குத் தான் ஏன் இந்த நாடகத்தைச் செய்தோம் என்ற காரணத்தைக் கூறி, அவளது கடந்தகாலத் தவறை உணர வைக்கவேண்டும் எனத் திட்டமிட்டிருந்தவன், பாதியில் இப்படி ஒரு சம்பவம் நடக்கும் என எதிர்பார்க்கவில்லை.

அவளைப் பார்த்தவுடன் புன்னகைத்திருக்கவேண்டும். சட்டென யாரோ போல் யோசித்தவுடன் அந்த நிராகரிப்புதான், தாங்கமுடியாத உணர்ச்சிக் கொந்தளிப்புகளை அவளுக்குள் ஏற்படுத்தி

நரம்புகளைப் பாதித்து இப்படி பேய்க் கூச்சல் போடக் காரணமாகிவிட்டது.

இதயம் படபடத்தது. சேகரின் ஞாபகம் வந்தது. அவன் இறந்த அன்று கேட்ட அவன் அம்மாவின் வார்த்தைகள்:

''உனக்கு சேகர் ஒரு நல்ல ஃபிரெண்டா இருந்தது உண்மைன்னா அவன் சாவறதுக்குக் காரணமான அந்தப் பொண்ணை என் முன்னாடி கூட்டிட்டு வருவியாடா. டேய் சூர்யா... அவ என்னடா அப்பேற்பட்ட ராஜகுமாரியாடா ?''

இரண்டு நாட்களுக்குப் பிறகு...

தூறலான இரவுப் பொழுதில் சென்னை ராயப் பேட்டையிலிருந்த ஒரு புகழ் பெற்ற கிளினிக்கின் தலைமை மருத்துவர் அறை.

''அப்ப உன் நாடகத்தை மூட்டை கட்டிட்டேன்னு சொல்லு.''

''இல்லைப்பா... தேன்மொழியைத் தப்பா எடை போட்டுட்டேனோன்னு தோணுது. ஒருவேளை ஏன் அவ ஒரு நல்ல கேரக்டரா இருக்கக் கூடாது?''

''என்னாச்சு. ஒரே வாரத்துல கதையைத் தலைகீழா மாத்துற. ஒருவேளை உண்மையிலேயே நீயும் அவளை லவ் பண்ண ஆரம்பிச்சிட்டியா?''

''தெரியலப்பா... அன்னிக்கு ரயில்வே ஸ்டேஷன்ல அவ கத்தினதைப் பார்த்திலேருந்து மனசு அவளுக்குச் சாதகமா பேசுது. சேகர் சாவுக்கு இவ மட்டுமே காரணமில்லையோன்னு நெனைக்கத் தோணுது.''

''ஒருநாள் நீதான் வைசாக் ஸ்டேஷன்லர்ந்து ஃபோன் பண்ணி, சேகர் சாவுக்குக் காரணமான பொண்ணைப் பாத்துட்டேன்ப்பான்னு சொன்னே. காணாம போன அவ பர்ஸ்ல, அவளோட ஃபுல் பயோடேட்டாவும் இருக்கு. இதை வெச்சு அவளை கார்னர் பண்ணி சேகர் அம்மா கண்ணு முன்னாடி நிறுத்தப் போறேன்னு சொன்னே. இப்ப என்னடான்னா இன்னொரு கதை சொல்றே''



**ஒரு சிறுமியைப் போல் பார்த்த அவளது அன்பு ததும்பிய பார்வை ஞாபகத்துக்கு வந்தது**

''உண்மை என்னன்னு முழுசா தெரிஞ்சுக்கிட்டு இறங்கியிருக்கலாமோன்னு தோணுது.''

''ஒண்ணு சொல்லட்டா? அவளுக்கு ஃபோனைப் போட்டுப் பேசு. நடந்த விஷயத்துக்கு மன்னிப்பு கேளு. ஒருநாள் மீட் பண்ணு... அப்புறம் மெல்ல அவ வாயாலயே என்ன நடந்ததுன்னு வரவழை... அவ பக்கம் நியாயம் என்னன்னு முழுசா தெரிய வரும். அதுக்கப்புறம் டிசைட் பண்ணிக்கலாம்.''

''கரெக்ட்ப்பா'' சூர்யாவின் முகம் பிரகாசித்தது.

''சரி இப்ப அவ எப்படி இருக்கா... நார்மலாயிட்டாளா? இல்லை... ''

''தெரியலைப்பா... ''

''முதல்ல அவ என்ன கண்டிஷன்ல இருக்கான்னு போய்ப்பாரு. யாருகிட்டயாவது கேளு.''

சூர்யாவுக்கு இப்போதுதான் உறைத்தது.

அப்பாவின் கேள்வி அவனைப் பல விபரீத எண்ணங்களுக்கு அழைத்துச் செல்ல, எழுந்து வாசலுக்கு ஓடினான்.

*(மீன்கள் துள்ளும்)*

என்னுடைய அனுபவம் வெறும் பிரமையல்ல; மயக்கமல்ல. உண்மையாகவே, பிரதி பௌர்ணமியும் ஒரு மாயரூப மோஹினி என்னைத் தேடி வருகிறாள். அவள் யார்? எப்படிப்பட்டவள்? எதற்காக இந்த ஏழை உபாத்தியாயரைத் தேடி வருகிறாள்? என்றாவது ஒரு நாள் அவளை ரூபத்துடன் நான் காண்பேனா? இந்த அற்புத அனுபவத்தின் மர்மம் இன்னதென்பதைத் தெரிந்துகொள்வேனா?

இதற்குப் பதில் அடுத்த பௌர்ணமியன்று எனக்குக் கிடைத்தது. அன்று வழக்கம்போல் சதங்கையொலி கேட்டதும் நான் ஒலி வந்த திசையை நோக்கித் திரும்பிப் பார்த்தேன். மெய் சிலிர்த்துத் திகைத்துப் போனேன். உண்மையாகவே ஒரு பெண்ணுருவம் என்னை நோக்கி வந்துகொண்டிருந்தது. அவ்வுருவம் நடந்து வருவதாகத் தோன்றவில்லை; காற்றில் மிதந்து வருவதாகத் தோன்றியது. அது உண்மை உருவந்தானா? அல்லது உரு வெளித் தோற்றமா? அருகில் நெருங்க நெருங்க, ஒரு நிஜப் பெண்தான் வருகிறாள் என்று நிச்சயமாயிற்று.

படங்களிலே நாம் பார்த்திருக்கும் ராஜபுத்திர கன்னிகைகளைப் போல் அவள் பாவாடையும் தாவணியும் அணிந்திருந்தாள். ஆபரணங்களும் அம்மாதிரியே இருந்தன. தாவணியின் தலைப்பைத் தலையில் முக்காடுப் போட்டுக் கொண்டிருந்தாள். வெண்ணிலாவின் ஒளி அவள் முகத்தில் பட்டபோது, உண்மையில் அந்த முகத்திலிருந்துதான் நிலவொளி வீசுகிறதோ என்று தோன்றியது.

அருகில் அவள் நெருங்க நெருங்க, முகம் தெரிந்த முகம்போல காணப்பட்டது. எப்போதோ, எங்கேயோ, அவளை நான் பார்த்திருக்கிறேன். பேசியிருக்கிறேன். குலாவியிருக்கிறேன். ஆனால், எங்கே? எப்போது?- இப்படி நான் சிந்தித்துக் கொண்டிருக்கையிலே, அவள் என் அருகில் வந்து நின்றாள். அவளுடைய பரந்த கண்களால் என்னை 'நிமிர்ந்து பார்த்தாள். அந்தக் கண்களில் ததும்பிய நீர்த்துளிகள் வெண்ணிலவில் முத்தைப் போல பிரகாசித்தன. அப்படிப் பார்த்த வண்ணம், 'குமார்! என்னை ஞாபகம் இருக்கிறதா?' என்று கேட்டாள். அந்த இனிய குரல் என் காதில் விழுந்ததும், என் இருதயம் விம்மி வெடிப்பது போலிருந்தது. எப்போதோ ஒரு சமயம்,



# பௌர்ணமி சதங்கையொலி!

# அமரர் கல்கி — வண்ணத் தூரிகை



அவளுடைய கையை நான் பிடித்துக்கொண்டு, 'இந்த ஜன்மத்தில் மட்டும் அல்ல, ஏழேழு ஜன்மத்திலும் உன்னை நான் மறவேன்; இது சத்தியம்!' என்று அவளுக்கு வாக்கு கொடுத்தது மிகப் பழைய ஒரு கனவைப் போல் ஞாபகம் வந்தது. அவளுடைய கேள்விக்கு ஏதோ பதில் சொல்ல வாயெடுத்தேன்.

- 'இடிந்த கோட்டை' கதையிலிருந்து...

## மனசைக் குளிப்பாட்டும் முக்கொம்பு!





ஆர்தர் காட்டன்

கடல் சூழ்ந்து உருவாகும் தீவுகளில் சுவாரஸ்யத்துக்குப் பஞ்சம் இருக்காது. அதற்குச் சற்றும் சளைத்தவையல்ல நதியால் உருவாகும் தீவுகள். சுவாரஸ்யத்தாலும் ஆன்மிக அலையாலும் கிட்டத்தட்ட 35 கிலோமீட்டர் நீளமும் பத்து கிலோமீட்டர் அகலமும் கொண்டு, நம்மைச் சுவீகரித்துக்கொள்ளும் பசுமை பிராந்தியம்தான் காவிரியின் முக்கொம்பு தொடங்கி கல்லணை வரை விரிந்திருக்கும் தீவுப் பகுதி. அகண்ட காவிரி உண்டாக்கிய தீவின் முனைப் பகுதியில் இருக்கிறது முக்கொம்பு. திருச்சியிலிருந்து கரூர் செல்லும் சாலையில் 13வது கிலோமீட்டரில். மூன்று ஆறுகள் பிரிவதால் முக்கொம்பாம். கொள்ளிடம் ஆற்றைப் பார்க்கும்போதே தெரிகிறது காவிரியின் கருணை எல்லை. ஆங்கிலேயர்களின் ஆட்சிக்காலத்தில் கொள்ளிடத்தின் மீது கட்டப்பட்ட அணை, அதை மேலும் அழகாக்கி இருக்கிறது. ஆர்தர் கார்ட்டன் எனும் ஆங்கிலேய என்ஜினீயர்தான் 1836ல் அணை கட்டியவர். பின்னர்தான் காவிரியின் வெள்ளத்தைக் கொள்ளிடத்துக்குத் திருப்பி விட காவிரிமீது அணை கட்டப்பட்டிருக்கிறது. தவிர ஆபத்தான புதைமணல்களும் அழகான சோலைகளும் நம் இதயத்தை ஈர்க்கும் ஏற்பாடாக இயற்கை உருவாக்கி வைத்திருக்கிறது. 1940 முதல் திருச்சி மாவட்ட சுற்று






# காவிரியின்

## மூத்த திருப்பதி

லாவின் தலைநகரம் என்றால் அது முக்கொம்புதான். காவிரியைக் கண்களால் பருகிக்கொண்டே நகர்ந்தால் முக்கொம்புக்கு வடமேற்கில் குணசீலத்தில் இருக்கிறார் பிரசன்ன வேங்கடப்பெருமாள். திருப்பதிக்கும் மூத்த தலம். அதனால் மூத்த திருப்பதி என்பது இன்னொரு பெயர். திருப்பதி வெங்கடாஜலபதியைத் தரிசிக்கும் முன்னர் திருவெள்ளரை புண்டரிகாஷப் பெருமாளையும், தரிசித்த பின்னர் குணசீலப் பெருமாளையும் காண வேண்டும் என்பது வைணவக் கடமை. பித்தம் தலைக்கேறியவர்களை குணசீலத்துக்குக் கூட்டிவந்து காவிரியில் குளிப்பாட்டிக் குணப்படுத்துகின்றனர். காவிரியின் மகிமை அப்படி.

மறுபடியும் காவிரியின் தென்கரை வழியாக கிழக்கு நோக்கிப் பயணித்தால் முக்கொம்பிலிருந்து மூன்றாவது கிலோ மீட்டரில், பழூரில் இருக்கிறது நவக்கிரகக் கோயில். இந்தக் கோயில் சிறப்பே நவக்கிரகங்கள் தங்கள் தேவியரோடு அருள்பாலிப்பதுதான். சோழ தேசத்தில் பாண்டியர்களால் கட்டப்பட்ட கோயில் அது. சாட்சியாக மதில் சுவரில் இருக்கிறது மீன் சின்னம். குரு பெயர்ச்சிதான் இங்கே திருவிழா. திருச்சிக்கு அருகே இருக்கும் ஸ்ரீரங்கமும், திருவானைக்காவலும் உலகப் பிரசித்தம். உலகிலேயே மிகமிக சுகவாசியென்றால் அது ஸ்ரீரங்கத்துப் பெருமாள்தான்! (இந்த இதழில் வெந்நீர் அபிஷேகப்ரியன் கட்டுரையைப்



பிரசன்ன வெங்கடாஜல...

# கருணை!

# காலத்தை வென்ற கரிகாலன்!



படிக்கவும்). திருவானைக்காவல் ஜம்புகேஸ்வரர் - அகிலாண்டேஸ்வரி கோயில்தான் தமிழகத்தின் முதல் மாடக்கோயில். இவையெல்லாம் அமைந்தது எதனால் என்று யோசிக்காமலே சொல்லிவிடலாம்; காவிரியின் கருணையால் என்று. காவிரியின் தென்கரையில் கிழக்கே திருச்சியிலிருந்து 3 கிலோமீட்டரில் சர்க்கார்பாளையத்தில் இருக்கிறது காலத்தை வென்ற கரிகாலன், காசி விஸ்வ நாதனுக்கு எடுப்பித்த கோயில். இது காலத்தால் கல்லணைக்கு மூத்தது. ஆக கல்லணைக்கு அண்ணன் காசி விஸ்வநாதன். வெள்ளப் பிரவா கத்தால் அடிக்கடி உடைத்துக்கொள்ளும் காவிரிக் கரைக்கு காசி விஸ்வநாதன் வந்த பிறகு உடைப்பே ஏற்படவில்லையாம். காசியிலிருந்து லிங்கம் தருவித்து இங்கே பிரதிஷ்டை பண்ண விரும்பினானாம் கரிகாலன். லிங்கம் கொண்டு வரக் காசிக்குப் போனவர்கள் திரும்பிவரக் காலதாமதம் ஆனதால், தானே ஒரு லிங்கத்தை வடித்து பிரதிஷ்டை பண்ணினானாம். பிறகு காசிக்குப் போனவர்கள் லிங்கத்தோடு வந்திருக்கிறார்கள். அதுவும் ஸ்தல விருக்ஷத்துக்கு அடியில் பிரதிஷ்டை ஆகியிருக்கிறது. காசி விஸ்வநாதனை தரிசித்துக் கொண்டு திரும்பி னால் கால்மணிநேர கார் பயணத்தில் இருக்கிறது கல்லணை. காவிரி ஏற்படுத்திய தீவின் கடைப்பகுதி

# நெஞ்சு ஊறும் ஈசன்!



யில் - தமிழனின் நீர்மேலாண்மைக்கும் பொறியியல் தொழில்நுட்பத்துக்கும் சான்றாக, உலகத்தின் ஆதி அணை. புதைமணல் பகுதியில் இவ்ளோ பெரிய அணை எப்படிச் சாத்தியம் என உலகக் கட்டிடப் பொறியாளர் சமூகமே வியந்துபோகிறது. வீணாகக் கொள்ளிடத்தில் வழிந்த வெள்ளத்தை அணை கட்டி அடக்கியவனின் ஆதி மூளையை வணங்கத் தோன்றுகிறது. காவிரி, கொள்ளிடம், வெண்ணாறு, புதாறு, கல்லணைக் கால்வாய்... என காவிரி ஐந்தாகப் பிரியும் கல்லணையின், வெண்ணாற்றங்கரையில் வெண்ணிப் பரந்தலையில் பிறந்தவன்தான் கரிகாலன். அவன் போட்டுக்கொடுத்த அடித்தளம்தான் பின்னர் வந்த சோழர்களுக்கு சோறுடைத்த சோழதேசம் கிடைக்க ஏதுவாய் இருந்தது. வாழ்வாங்கு வாழ்ந்த தமிழ்ச் சமூகம் காவிரித் தண்ணீருக்குக் கையேந்தும் அளவுக்கு வீழ்ச்சியுற்றது எதனால்? யோசிக்க யோசிக்க உண்மை கசக்கிறது. என்னதான் கர்நாடகா, நமக்குத் தண்ணீர் தர மறுத்தாலும் ஏற்கெனவே காவிரி ஓடிய கருணையில் ஓரளவாவது வளமையை இழக்காது இருக்கிறது தமிழகம். திரும்பும் வழியில் பாலாபிஷேகம் காணாத எறும்பீஸ்வரர். திருவெறும்பூரில் இருக்கும் இந்த ஈசன், தன் மேனியில் எறும்பு ஊர இடம் அளித்தது போல, கர்நாடகர்கள், தமிழகக் காவிரிக்குத் தண்ணீர் தர வேண்டும் என்று வேண்டிக்கொண்டு திருச்சி வந்து சேரலாம். வேறென்ன செய்ய...?


காசி லிங்கம்

## கல்லணைக்கு அண்ணன் காசிவிஸ்வநாதன்!





## இவங்க இப்படித்தாங்க... 12

தேவயானியை முதன்முதலாக விஜயா வாகினி ஸ்டுடியோவில் சந்தித்த நேரம் அவருக்குத் தமிழும் தெரியாது. தமிழ் சினிமாவையும் தெரியாது. இயக்குநர் கே.எஸ்.அதியமானைச் சந்திக்கச் சென்றபோது, 'தொட்டா சிணுங்கி' படப்பிடிப்பில் மேக்கப் ரூமில் இருந்த தேவயானியை அணுகிப் பேசியபோது, ''ஸாரி நீங்க யாருன்னு தெரியாது. நீங்க சொல்ற பத்திரிகை பத்தியும் தெரியாது. அதனால இப்ப நான் எதுவும் பேச விரும்பலை'' - என்றார் படபடப்பான ஆங்கிலத்தில். பின்னர் நல்ல தோழியானார்.

இவரது பூர்வீகம் மும்பை. ஜூன் 22-ல் சுஷ்மா மருத்துவமனையில் பிறந்த தேவயானியின் தந்தை ஜெயதேவ் கொங்கணி, அம்மா லட்சுமி மலையாளி. இரண்டு தம்பிகள் மயூர், நகுல்... இன்று ஹீரோவாகப் பேசப்படும் நகுலன்தான் நகுல்.

பி.காம், வணிகவியல் படித்திருக்கும் இவர், ''சினிமாவுக்கு வராதிருந்தால் ஏதேனும் வங்கியில் கேஷியராகப் பணியாற்றிக் கொண்டிருப்பேன்'' என்பார். இவர் நடித்த முதல் இந்திப் படம் 'கோயல்'. அது வெளியாகவே இல்லை. மலையாளத்தில் நடிக்கத் தொடங்கிய இவரை தமிழில் அறிமுகப்படுத்தினார் அதியமான்.

'தொட்டாசிணுங்கி'யில் இரண்டாம் நாயகியாக பிரபுதேவாவின் தம்பி பிரசாத் ஜோடியாக நடித்தார். அடுத்து பிரசாந்த், அஜித் நடித்த 'கல்லூரி வாசல்'. இதிலும் இரண்டாம் நாயகி. சத்யராஜ், பிரபு நடித்த 'சிவசக்தி'யில் சற்று கவர்ச்சியாக ஒரு பாட்டுக்கு ஆடினார். இந்த மூன்று படங்களும் சரியாகப் போகவில்லை.

அடுத்து வாய்ப்பும் வரவில்லை. வந்தவையும் ஒரு பாட்டு கவர்ச்சி நடனமாடவே கூப்பிட்டனர். இது பிடிக்காமல் மும்பைக்குச் சென்றுவிட்டார்.

சபீதா ஜோசப்

# காதல் டைரக்ஷன்



'காதல் கோட்டை'யின் மாபெரும் வெற்றி தேவயானியின் நட்சத்திர அந்தஸ்தையும் உயர்த்தியது; படங்களையும் குவித்தது. அப்போது அவர் பாலுமகேந்திராவின் வீட்டில் வாடகைக்கு இருந்தார். ஒருநாள், 'தமிழகத்தின் முன்னணி சினிமா பத்திரிகையாளர்களைச் சந்தித்து நன்றி சொல்ல வேண்டும்' என்றார். அப்போது நான்தான் பத்து முன்னணிப் பத்திரிகையாளர்களை அவரது வீட்டுக்கு வரவழைத்து நேருக்கு நேராகப் பெயரையும் பத்திரிகையையும் சொல்லிப் பேச வைத்தேன்.

டென்ஷனாக இருந்தால் நகம் கடிப்பது தேவயானியால் விட முடியாத பழக்கம். அரசியல் பிடிக்காது. கடவுள் பக்தி அதிகம். பூஜை அறைக்குச் சென்றுவிட்டால் ஒரு மணி நேரம் பிரார்த்தனையில் மூழ்கி விடுவார். சில நேரம் பக்திப் பரவசத்தில் அழுதும் விடுவார். வெஜ், நான்-வெஜ் சமையல் செய்வதில் கில்லாடி. சாப்பிடுவதிலும்தான்! உடற்பயிற்சி பற்றி எல்லாம் பெரிதாக முயற்சி எடுப்பதில்லை.

எப்போது அவர் வீட்டுக்குப் போனாலும் டிஃபன் சாப்பிடாமல் அனுப்பியதில்லை. இரவு பத்து மணிக்குக்கூட அவர் வீட்டுக்குப் போய்ப் பேசுவோம். 'உங்களைப் பத்தி கிசுகிசு வந்திருக்கே' என்று சும்மா கலாய்ப்போம். 'அப்படியா?' என்று சிரிப்பார். 'வந்து இவ்வளவு நேரமாகியும் ஒரு டீ, டிஃபன் தருகிறீர்களா? வர வர பத்திரிகையாளர்களை தேவயானி மதிக்கிறதில்லைன்னு எழுதிடலாமா?' என்று கலாய்த்தால் அதற்கும் வாய் நிறையச் சிரிப்பார்.

ஒன்றாம் வகுப்பு படிக்கும் போது மும்பை ஜுஹு கடற்கரையில் காணாமல் போய்விட்டாராம். பிறகு எப்படியோ வீட்டைக் கண்டுபிடித்து வந்து சேர்ந்தாராம்.

97ல் 'காதல் கோட்டை' படத்துக்காக சிறந்த நடிகை விருது பெற்றது மறக்க முடியாதது என்பார். சுமார் ஐம்பதுக்கும் மேற்பட்ட படங்களில் நடித்திருக்

கும் தேவயானியின் வாழ்வில் 'நீ வருவாய் என' படம் ஒரு மாற்றம் ஏற்படக் காரணமாக அமைந்தது. 'சூர்ய வம்சம்' முதல் ராஜகுமாரனுடன் தொடங்கிய நட்பு மறுபடியும் வலுப் பெற்றது. அடுத்து 'விண்ணுக்கும் மண்ணுக்கும்' படத்தின்போது அந்த நட்பு காதலாக மாறியது.

தேவயானி - ராஜகுமாரன் திருமணம் உலகமே அறிந்த விஷயம். கல்யாணமான நடிகைகளுக்கு கதாநாயகி தமிழ் சினிமாவில் வாய்ப்பு மறுக்கப்படுமே!



# 'காதலுடன்' பட்ட கடனை 'கோலங்கள்' போட்டு அடைத்தேன்!

கணவர் இயக்க மனைவி கதாநாயகியாக நடித்து 'காதலுடன்' என்ற சொந்தப் படம் எடுத்தார். அதில் பட்ட கடனை அடைக்க 'கோலங்கள்' மெகா தொடரில் நடித்தார். சின்னத்திரையும் அவருக்கு நல்ல வரவேற்பு கொடுத்தது. தமிழ்நாட்டினர் பலரின் குடும்பத்தில் ஒருவராக 'அபி' என்ற கேரக்டரால் பேசப்பட்டார்.

'கோலங்கள்' தொடர் வந்து கொண்டிருந்த நேரத்தில் அதன் படப்பிடிப்பில் சந்தித்தேன். ''என்ன தொடர் முழுக்க இப்படி அழுது வடியும்படியாகவே வருகிறீர்களே, தன்னம்பிக்கை தரும் பெண்ணாக எப்போது வரப் போகிறீர்கள்?'' என்றதும் வழக்கமான புன்னகையை வீசினார்.

''இதில் அழுகிற மாதிரி நடித்து நடித்து சிரிக்கிறதையே மறந்துவிடுவேனோனு பயமாயிருக்கு. நான் அழுவது மாதிரி நடிக்கிறபோதுதான் பெண்களின் அனுதாபம் கூடுகிறது. 'டிஆர்பி' எகிறுது என்று டைரக்டர் சொல்கிறார்.

எனக்கு எப்பவும் சிரிச்சுக்கிட்டிருக்கிறதுதான் பிடிக்கும். எனக்குப் பிடிச்ச நடிகர் வடிவேலுதான். அவரைப் பார்த்தவுடனே சிரித்து விடுவேன் வாழ்க்கையில எப்பவும் சிரித்துக்கொண்டே இருக்கணும் என்று நினைப்பவள் நான்'' என்றார்.

**ச**மீபத்தில் சந்தித்தபோது நான்கு வயது இனியா, இரண்டு வயது பிரியங்கா என இரண்டு குழந்தைகளின் அம்மாவாக, குழந்தை வளர்ப்பு பற்றியும், குடும்பத்தை அழகாக வைத்துக் கொள்வது பற்றியும் பேசுகிறார்.

''நீங்க நல்ல குடும்ப ஸ்த்ரீ'' என்று சொல்லிவிட்டு வந்தேன். அவரை முதன் முதல் சந்தித்த நிருபர் நான்தான் என்பது அவருக்கு நினைவில்லை; நானும் சொன்னதில்லை. **(அடுத்த வாரம்: கார்த்திக்)**

அனைவருக்கும் புத்தாண்டு மற்றும் பொங்கல் நல்வாழ்த்துக்கள்!



---

ஒருமுறை எம்.ஜி.ஆர், 'தமிழ்நாட்டின் துணை தலைநகரமா திருச்சியை உருவாக்கலாம்'னு யோசனை தந்தார். அது அப்படியே காத்தோட கரைஞ்சு போச்சு. துணை தலைநகரம் ஆகற அளவுக்கு இங்கே வசதிகள் இருக்கா? அட.... அம்புட்டு ஆசைகூட வேணாம். எதிர்கால திருச்சி எப்படி இருக்கணும்? அதனோட நல்ல வளர்ச்சிக்கு என்ன பண்ணலாம்? திருச்சி மாநகர வளர்ச்சி மீது அக்கறை கொண்ட மனிதர்கள் பலரில், ஒரு சிலரை ஒருங்கிணைத்து உரையாட ஏற்பாடு செய்தோம்.

வாசன் ரியல் எஸ்டேட் சேர்மன் ரவி முருகையா, வி.ஐ.பி. பில்டர்ஸ் உரிமையாளர் எம்.டி.ராஜராஜ சோழன், தமிழ்நாடு வர்த்தக கழக செயற்குழு உறுப்பினர் எல்.எல்.சந்தானகிருஷ்ணன், சமூக நல ஆர்வலர் ஜி.கே.முரளீதரன் இவர்களுடன் திருச்சி மாவட்ட இந்திய ஜனநாயக மாதர் சங்கத் தலைவி வைரமணியும் இணைந்துகொள்ள... உரையாடல் சூடும் சுவையுமாகத் தொடர்ந்தது...



* எல்.எல்.சந்தான கிருஷ்ணன்

• சந்தானகிருஷ்ணன் : ஒரு மாநகர வளர்ச்சிக்கு முதல்ல அதனோட எல்லைகளை விரிவுபடுத்தணும். குட்டியூண்டு நகரை வெச்சுகிட்டு குண்டுச் சட்டிக்குள்ளார குதிரை ஓட்ற வித்தையிலேருந்து

# நாங்க ரெடி...



விலகி வந்து யோசிச்சுச் செயல்படணும்.

• ராஜராஜ சோழன் : மத்த மாநகரங்கள் போல

* ஜி.கே.முரளிதரன்



* வைரமணி



செயற்கையா அமைஞ்சது இல்ல திருச்சி. இயற்கையா அமைஞ்சது.

• **வைரமணி :** இயற்கையா அமைஞ்சதாலதாங்க இந்தப் பிரச்னையே.

• **முரளீதரன் :** செயற்கையா... இயற்கையா... அப்படீங்கற ஆராய்ச்சி இப்ப வேணாம். மாநகர் உள்ளே போக்குவரத்து நெரிசல் ரொம்ப அதிகமாகிப் போச்சு. அதனால கால விரயம் ஆகுது. அதைத் தீர்த்தாத்தான் மத்த வளர்ச்சிக்கு நாம போக முடியும்.

• **ரவி முருகையா :** அஞ்சாறு வருஷமா திருச்சிக்கு ஒருங்கிணைந்த பேருந்து நிலையம் வருதுன்னு பேசிக்கிட்டே இருக்காங்க. வந்தபாடு இல்லை. அது வந்து, நாலாபக்கமும் அவுட்டர்ல புறநகர்ப் பேருந்து

## இரண்டாவது தலைநகருக்கு இந்த கதியா?

நிலையங்கள் வந்தாத்தான் இதுக்கு ஒரு தீர்வு காண முடியும். மதுரை மாதிரி சேலம் மாதிரி திருச்சிக்கு அந்த ஒருங்கிணைந்த பேருந்து நிலையம் எப்ப வரப் போகுதுன்னு தெரியல.

• **வைரமணி :** அப்பப்ப ஆட்சியில இருக்கிற ஆளுங்கட்சிக்காரங்களோட சுயநலத்தாலதாங்க, அந்தத் திட்டம் இன்னும் நடைமுறைக்கே கொண்டுவரப் படலை. பூனைக்கு யாரு மணி கட்டறது?

• **ரவி முருகையா :** முதல் மணி நான் கட்ட முன் வந்தேன்ங்க. துறை சார்ந்த அதிகாரிகள்கிட்டயும் என் பங்களிப்பைச் சொன்னேன். இதுவரைக்கும் பதில் வரலை.

• **முரளீதரன் :** மத்த

# நீங்க ரெடியா?



* ராஜராஜ சோழன்



* ரவி முருகையா

மாநகரங்களோட ஒப்பிடும்போது, இங்கே சாலை வசதிகள் ரொம்பக் கம்மி. ரோடு போட்ட மூணு மாசத்துல அது பெயர்ந்திடுது...

• **வைரமணி :** முந்தியெல்லாம் ரோடு போடறதுக்கு ரொம்பவே மெனக்கெடு வாங்க. இப்ப அப்படி இல்ல. ஏதோ பாய் விரிக்கற மாதிரி டக்குனு வந்து ரோடு போட்டுட்டுப் போறாங்க. அது பெயர்ந்துக்காம என்ன பண்ணும்?

• **ராஜராஜ சோழன் :** இது நவீனத் தொழில்நுட்பம் மேடம். எல்லா துறைகள்லயும் நாம போய்ச் சேர்ந்துடுச்சு. காரணம், அரசியல் சுயலாபம்.

• **வைரமணி :** சுற்றுப்புற சுகாதாரம்ங்கறது திருச்சியில குறைஞ்சுக்கிட்டே வருது. இப்ப இருக்கற சென்ட்ரல் பஸ் ஸ்டாண்ட் ரொம்பவே மோசம். சுகாதாரம், தொழில், கல்வி மூணுலயும் திருச்சி இன்னும் மேம்படணும்.

• **முரளீதரன் :** காமராஜர் கொண்டு வந்த பாய்லர் ஆலைக்கு அப்புறம், திருச்சிக்கு வேறு எந்தப் பெரிய தொழிற்சாலையும் இன்னும் வரவே இல்லியே! புதுசு புதுசா பெரிய

**“ சுற்றுப்புற சுகாதாரம் திருச்சியில் குறைந்து கொண்டே வருகிறது! ”**



புதுடெக்னாலஜிகளை ஏத்துக்கிட்டுத் தான் வர்றோம். அதை ஒண்ணும் பண்ண முடியாது. பழைய மெத்தட்ல ரோடு போடணும்னா, இன்னைக்கு இத்தனை ரோடுகள் வந்திருக்குமா... அவற்றைப் பராமரிக்கவும் முடியாது.

• **எல்.எல்.சந்தானகிருஷ்ணன் :** திருச்சி அரசு மாவட்ட தலைமை மருத்துவமனைக்கு நூற்றுப்பத்து கோடி ரூபாய்ல தரம் உயர்த்தும் திட்டம் வர்றதா இருந்துச்சு. விமான நிலையத்தை சர்வதேச அளவுல தரம் உயர்த்தும் திட்டம் வர்றதா இருந்துச்சு. இது ரெண்டுமே வேற மாநகருக்குப் ஃபேக்டரிங்க வந்தாத்தானே மாநகரம் வளர்ச்சி அடைய முடியும்?

• **ராஜராஜ சோழன் :** அதான் ஐ.டி.பார்க் வர இருக்கே. அப்ப ஏர்போர்ட்டை இன்னும் தரம் உயர்த்தறது ரொம்ப அவசியம். சுகாதாரம், கல்வி, வேலை வாய்ப்பு மூணும் சொன்னாங்க. விளையாட்டுத் துறையைச் சும்மா விட்டுட்டீங்களே! திருச்சியில சர்வதேச தரத்திலான விளையாட்டு அரங்கம் அமைக்கணும். இந்தியாவின் பார்வை மட்டுமல்ல, உலக நாடுகளின் பார்வையும் திருச்சி மீது குவியும்.

• **ரவி முருகையா :** ஒருங்கிணைந்த

பேருந்து நிலையம், புறநகர்ப் பகுதிகளில் இணைப்பு பேருந்து நிலையம், தலைமை மருத்துவமனை தரம் உயர்த்துதல், புதிய தொழிற்சாலைகள் வருகை, அடிக்கல் நாட்டப்பட்டிருக்கும் ஐ.டி. பார்க் நிறைவு பெற்றுச் செயல்படுதல், நம்ம தம்பி சொன்ன மாதிரி சர்வதேசத் தரத்திலான விளையாட்டரங்கம், சர்வதேசத் தரத்திலான விமான நிலையம் எல்லாம் வந்துட்டா திருச்சி மாநகரம் தமிழகத்திலேயே வளர்ச்சி பெற்ற மாநகரமாக ஆகிப் போகும்.

● **வைரமணி :** அடுக்குமாடிக் கட்டிடம் போல, நீங்க அடுக்கிச் சொல்ற விஷயம் எல்லாம் கேட்க நல்லாத்தான் இருக்கு. ஆனா, நடைமுறைக்கு வந்தாகணுமே! இரண்டாவது தலைநகருக்கே இந்தக் கதின்னா மத்த நகரங்களுக்கு...

● **ராஜராஜ சோழன் :** பெரிய திட்டமோ, சின்ன திட்டமோ அதுக்கு பொதுமக்களோட ஒத்துழைப்பும் பங்களிப்பும் அவசியம் தேவை. திருச்சி மாநகர என்.ஆர்.ஐ.வாசிகளிடம் நிதி திரட்டலாம்.

● **ரவி முருகையா :** ஆரம்பத்துல சொன்ன விஷயத்துக்கு இப்ப நான் வர்றேன். திருச்சியில ஒரு திட்டத்துக்கு என் சொந்தச் செலவுல ஒரு பகுதியைச் செஞ்சு தர்றதா சம்பந்தப்பட்ட துறை அதிகாரிகள்கிட்ட எழுத்துபூர்வமா ஒரு ப்ராஜெக்ட் சமர்ப்பிச்சேன். இன்னும் பதில் இல்லே. அந்தத் திட்டமும் பூர்த்தியாகிடுச்சு. மாநகர வளர்ச்சிக்குன்னு எந்தவொரு திட்டம் வந்தாலும் பெரு வணிகர்கள், தொழிலதிபர்கள் பங்கு அதில் இருப்பது அவசியம். அதில் முதல் பங்கு சேர்ப்பிக்க நான் தயார்! நீங்க தயாரா? கல்கி மூலமா இதுக்கு விடிவு வரட்டும்!

**நா**ந்தாங்க உங்க கைடு. பொதுவா திருச்சின்னா எல்லார்க்கும் முதல்ல ஞாபகத்துல வர்றது ஊர் நடுவில இருக்கிற மலைக்கோட்டை. அங்கேர்ந்து பார்த்தா தெப்பக்குளம். அதைத் தாண்டி புனித லூர்து அன்னை ஆலயம். அதிலிருந்து கொஞ்ச தூரத்துல நத்ஹர்வலி தர்கா. இது மூணும் அமைஞ்சிருக்கறது ரொம்ப பக்கத்துல பக்கத்துல. மொதல்ல உங்களை நத்ஹர்வலி தர்காவுக்குக் கூட்டிட்டுப் போறேன்.

மதுரை ரோட்ல (கிராப்பட்டி பக்கம் போயி டாதீங்க, டவுன் மத்தியில இருக்கு) சற்று உள்ளடங்கி அமைஞ்சிருக்கு நத்ஹர்வலி தர்கா. பிரம்மாண்டமான தோற்றம். ஆயிரத்து நூறு வருஷம் பழைமையானது. ஒவ்வொரு வருஷமும் சந்தனக்கூடு. அது தொடர்ந்து இப்ப ஆயிரத்துப் பன்னிரண்டாவது வருஷமா நடந்துக்கிட்டு வருது. இந்திய மண்ணுல அடக்கம் ஆகியுள்ள மிக முக்கிய இஸ்லாமிய இறைத் தூதுவர்களில் இந்த தப்லே ஆலம் பாதுஷா ஒருவர். அதனாலத்தான் இதுக்கு தப்லே ஆலம் பாதுஷா நத்ஹர்வலி தர்கானு பேரு. அவரோட இறப்புக்கு அறுநூறு வருடம் கழிச்சு இங்கே வந்திருக்கார் நாகூர் ஆண்டவர். நாற்பது நாள் தியானம் பண்ணி யிருக்கார். நாகூர் ஆண்டவருக்கு இங்கே தான் மகான் பட்டம் தரப்பட்டிருக்கு. ரம்ஜான் பிறை பதினான்கு அன்னைக்கு சந்தனக் கூடு. ஏரியாவே திருவிழாக்கோலம்'' அப் படின்னு சொல்றாரு குருக்கள் என்கிற பங்காளியாக இயங்கி வர்ற எம்.எஸ்.பிலால்.

நத்ஹர்வலி தர்காவுலேருந்து வடக்கு நோக்கி சும்மா ஒரு பர்லாங் தூரம் கை வீசி நடந்தா, கண்ணெதிரே நிக்கறது புனித லூர்து அன்னை ஆலயம். அதன் கோபுரம் ரொம்ப உயரம். பீம நகர் மேம்பாலத்துல ஏறி நின்னு பார்த்தீங்கன்னா நத்ஹர்வலி தர்கா, புனித லூர்து அன்னை ஆலயம், உச்சிப்பிள்ளையார் மலைக்கோட்டை மூணும் பளிச்னு தெரியும்.

**இ**ப்ப புனித லூர்து அன்னை ஆலயத் துக்கு முன்னாடி நிக்கறோம். இந்த ஆலயம் இடப்பெயர்ச்சி ஆகி இங்கு வந்தது தனிக் கதைங்க. மெயின் கதைக்கு வந்துடுவோம். நெடிய கோபுரம். அதன் உயரம் இருநூத்து இருபது அடி. அதுக்கு அழகு சேர்க்க நூற்றி ருபது அடி உயரங்கொண்ட குறுங் கோபுரங் கள். ஆலய கோபுர மையத்தில் ஐம்பெரும் புனிதர்கள். கோபுரத்தில்

# கோபுர





தொண்ணூறு அடி உயரத்தில் உள்ள தேவாலய மணி பிரெஞ்சு நாட்டில் தயாரானது. திருப்பலி பீடம். பீடத்தின் உச்சியில் ஆசி வழங்கும் புனித லூர்து அன்னை திருவுருவம். நடுவில் சிலுவையில் மீட்பர் இயேசு. ஐரோப்பாவில் 'கோத்திக்' கட்டடக் கலை அமைப்பில் கட்டப்பட்ட தேவாலயமங்க இது. உள்ளே போயி உறுத்தல் இல்லாம பிரார்த்தனை செய்ஞ்சா மன நிம்மதிக்கு, அந்த புனித லூர்து அன்னை அருள் நிச்சயம்.

புனித லூர்து அன்னை ஆலயத்துக்கும் மலைக்கோட்டைக்கும் குறுக்கே இருக்கறது தெப்பக்குளம்ங்க. கூப்பிடுற தூரத்துல மலைக்கோட்டை அடிவாரம். அங்கே மாணிக்க விநாயகர். அவரைத் தரிசனம் பண்ணிட்டுப் படியேறணும். நூற்றுக்கால் மண்டபம் (அமரத்துவம் அடையறவரைக்கும், ஒவ்வொரு வருடமும் தீபாவளி அன்னைக்கு காலைல சொற்பொழிவு ஆற்றுவாரு வாரியார் சுவாமிகள்) கடந்து மேலேறணும். ரெண்டு பாதை பிரியும். மேற்கால வந்தா தாயுமானவர் சன்னிதி. கிழக்கால போய் படிகள் ஏறுனா உச்சிப் பிள்ளையார். தாயுமானவரைத் தரிசிச்சிட்டுப் போகலாம். அம்மா துணைக்கு இல்லாதப்ப தன் பக்தைக்கு, அவளோட தாயாய் உருவெடுத்து பிரசவம் பார்த்துப் பணிவிடை செஞ்ச தாயுமானவர், அருள் நெறைஞ்சவர்.

தாயுமானவரைத் தரிசிச்சுட்டு கிழக்கால படி ஏறிப் போறோம். கொஞ்சம் மேல்தளம் போனதும் கண்கள் அலைபாயுது. மாநகர அழகு விரியுது. அப்படியே உச்சி மலை ஏறி வந்தா, உச்சிப் பிள்ளையார் சன்னிதி. அதனோட வெளிப் பிராகாரத்துல கம்பி வலை ஜன்னல் கட்டியிருக்கு. நாலாபுறமும் கண்ணுக்கெட்டின தூரம் வரைக்கும் பார்த்து ரசிக்கலாம். காவிரி ஆறு. அந்தப் பாலத்துல ஓடுற ரயிலு. கொஞ்ச தூரத்துல ஸ்ரீரங்க இராஜகோபுரம். தெக்கால வந்து பார்த்தா, செம்பட்டு ஏர்போர்ட்லேந்து கிளம்பிப் போற ப்ளேன்கள். பொன்மலை வொர்க்ஷாப், பாய்ஸ் ஆலை. இதமான காற்றை அனுபவிச்சுட்டு, உச்சிப்பிள்ளையாரைத் தரிசிக்கப் போறோம். அவரோட உச்சந்தலையிலே ஒரு பள்ளம். இலங்கைக்குப் போக இருந்த ரெங்கநாதர் விக்கிரகத்தைக் காவிரிக் கரையிலேயே தங்க வைக்க 'உள்ளடி' வேலை செஞ்சதால, விபீடணர் நம்ம பிள்ளையார் தலையில ஓங்கி வைச்ச குட்டு! ○

# தரிசனம்!





# பந்தாடப்படும்



**கோ**ல்ஃப் விளையாட்டை யாரும் நேரிலோ டீ.வி.யிலோ பார்த்திருக்க வாய்ப்பில்லை. நமக்கு மட்டுமல்ல, பொதுவாகவே கோல்ஃப் ஒரு பிரபலமான விளையாட்டு கிடையாது. ஒலிம்பிக்கிலும் அதற்கு இடம் கிடையாது. இப்படி யாரும் அக்கறைப்படாத கோல்ஃப் விளையாட்டுக்கு அதிகப் பார்வையாளர்களைக் கொண்டு வந்து தந்தவர் அமெரிக்காவைச் சேர்ந்த டைகர் வுட்ஸ். இன்று, பாலியல் குற்றச்சாட்டுகளுக்குப் பதில் சொல்லத் தெரியாமல் ரசிகர்கள் முன்னால் தலைகுனிந்து நின்றுகொண்டிருக்கிறார்.

மனிதன் அல்ல, அவர் ஒரு ரோபோ என்று அமெரிக்கர்களால் கொண்டாடப்படுபவர் டைகர் வுட்ஸ். மிகச்சிறிய வயதிலேயே கோல்ஃப் போட்டிகளில் கலந்துகொள்ள ஆரம்பித்ததால் மீடியா அவருடைய ஒவ்வொரு சாதனையையும் பதிவு செய்தது. இதனால் உலகின் மிகப்பெரிய விளையாட்டு வீரராக மதிக்கப்பட்டார் வுட்ஸ்.

மூன்று வருடம் காதலில் திளைத்த பிறகு 29 வயதில் எலின் நார்டெகிரனைத் திருமணம் செய்துகொண்டார் வுட்ஸ். அடுத்த இரு வருடங்களில் இரு குழந்தைகளுக்குத் தந்தையானார். இப்படி எல்லாமே வாய்க்கப்பெற்ற டைகர் வுட்ஸ், பெண்கள் விஷயத்தில் மிகவும் பலவீனமாக இருந்ததால் அவர் விளையாட்டு வாழ்க்கை கேள்விக்குறியாகியிருக்கிறது.

**சி**ல மாதங்களுக்கு முன்பு 'நேஷனல் என்கொயரர்' என்கிற பத்திரிகையில் டைகர் வுட்ஸ் பற்றி முதல் கிசுகிசு வெளிவந்தது. நைட்கிளப் மேனேஜரான ராச்சலுடன் வுட்ஸ் தகாத உறவு வைத்துக்கொண்டிருந்தார் என்றது அப்பத்திரிகை. இதற்கு வுட்ஸ் மௌனம் சாதித்தார். ஆனால் ரசிகர்கள் கொதித்தெழுந்தார்கள். பத்திரிகைமீது கோபம் கொண்டார்

ச.ந.கண்ணன்

கள். அதற்கு சிலநாள் கழித்து 'யுஎஸ் வீக்லி' என்கிற பத்திரிகைக்குப் பேட்டி கொடுத்த ஜைமி க்ரப்ஸ் என்கிற ஹோட் டல் உதவியாளர் பெரிய குண்டை வீசினார். 'எனக் கும் வுட்ஸுக்கும் இரண்டு வருட பந்தம் இருக்கிறது' என்று சொல்லிவிட்டு அதற்கு ஆதாரங்களையும் காண்பித்தார். 'டியர், நீ எனக்கு ஒரு நல் லது செய்யவேண் டும். உன்

# வுட்ஸ்!



ஃபோனில் இருந்து என் பெய ரையும் நம்பரையும் எடுத்து விடு. விஷயம் என் மனைவிக்குத் தெரிந்துவிட்டது' என்று அப்பெண்ணுக் குக் குறுஞ்செய்தி அனுப்பியிருந்தார் வுட்ஸ். அவ்வளவுதான்; விவகாரம் பற்றிக் கொள்ள ஆரம்பித்தது.

நிலைமை கைமீறிப்போனதைத் தொடர்ந்து இப்போது தலைகவிழ்ந்து மன்னிப்பு கேட்டுள்ளார் வுட்ஸ். ''என் குடும் பத்துக்கு நான் துரோகம் இழைத்துவிட் டேன்'' என்று சொன்னவர், தமக்கு பதி னான்கு பெண்களுடன் தொடர்பு உண்டு என் கிற உண்மையையும் வெளிப்படுத்தியிருக் கிறார். இதன் விளைவாக ஜில்லட், அக்சன்சர் போன்ற கம்பெனிகள் வுட்ஸுடனான பெரிய தொகை கொண்ட விளம்பர ஒப்பந்தத்தை ரத்து செய்துள்ளன. பிரச்னையைச் சமாளிக்க விளையாட்டிலிருந்து தற்காலிக ஓய்வு பெற் றுள்ளார் வுட்ஸ்.

**பொ**துவாகப் பாலியல் குற்றச்சாட்டு களுக்கு ஆளாகும் பிரபலங்களை அமெரிக் கர்கள் மன்னிப் பதில்லை. பில் கிளிண்டன் சிறந்த உதாரணம். இப்போது டைகர் வுட்ஸ். நிச்சயம் டைகர் வுட்ஸ் கத்தோலிக்க தேவாலயத்திலோ, தொடக்கப் பள்ளியிலோ பணிபுரியவில்லைதான். ஆனாலும் இளை ஞர்களுக்கு வழிகாட்டியாக இருக்கிற ஒருவர் அமெரிக்கக் கலாசாரம் வழங்குகிற கட்டற்ற சுதந்திரத்தைப் பயன்படுத்தி பல பெண்களின் வாழ்க்கையைச் சீரழித்தது ஏற்றுக்கொள்ள முடியாத குற்றம். பிரபலம் என்பதால் பொது வாழ்க்கைக்கு வருகிற ஒருவர் தம் திறமை யால் மட்டுமல்ல, நன்னடத்தையாலும் உதார ணப் புருஷராகத் திகழ வேண்டும். அந்த விஷயத்தில் டைகர் வுட்ஸ் தம் ரசிகர்கள் அத்தனை பேரையும் ஏமாற்றியிருக்கிறார். இனி அவர் என்ன சாதித்தாலும் அது பாதிக் கப்பட்ட பெண்களின் கண்ணீருக்குப் பதில் சொல்வதாக அமையாது. ○

"சென்னையின் துயரம் கூவம் என்றால் திருச்சியின் வலி மிகுந்த கண்ணீர் உய்ய கொண்டான். உய்ய கொண்டான் என்பது சோழ மாமன்னன் ராஜராஜனின் புனைபெயர். அவனைப் போலவே, இருபது இருபத்தைந்து வருடங்களுக்கு முன்புவரை உய்யகொண்டான் கால்வாய் அத்தனை கம்பீரமாக ஓடிக் கொண்டிருந்தது. இப்போது தொழுநோயால் பீடிக்கப்பட்ட சாமான்யனைப் போல உருக்குலைந்து சுகாதாரம் நசிந்து, பிளாஸ்டிக் கழிவு களின் பிடியில் கழுத்து நெறிபட்டு, தன் ஜீவ களையை இழந்து தவிக்கிறது. திருச்சியில் காவிரிக்கு நிகரான முக்கியத்துவம் வாய்ந்த உய்யகொண்டான் உயிர் வாடிக் கிடப்பதால் பாதிக்கப் படுவது மனித சுகாதாரம் மட்டுமல்ல, கால்வாயின் தண்ணீரை நம்பி இருக்கும் ஆயிரம் ஏக்கர் கணக்கான பாசனப் பகுதிகளும்தான். இது குறித்து பாலக்கரை உய்யகொண்டான் கரையில் வசிக்கும் 19வது வார்டு ம.தி.மு.க. கவுன்சிலர் முகமது முஸ்தஃபாவிடம் பேசினோம்....

"நான் உய்யகொண்டான் கால்வாய்ல குளிச் சிட்டுத்தாங்க பள்ளிக்கூடத்துக்கே போவேன். அப்ப தண்ணி அவ்ளோ சுத்தமா இருக்கும். தரையைத் தொட்டாப்புல மீன்கள் நீச்சலடிக்கறதை கரையிலே நின்னு வேடிக்கை பார்க்கலாம். ம்ம்ம்...அது ஒரு

# கூவமாகும்

காலம். இன்னிக்கு அதுல தவறி விழுந்துட்டோம்னா நேரா ஐ.சி.யூ.லதான் அட்மிட் பண்ணனும்.

உய்யகொண்டான் சுத்தமாகணும்னா அதனோட கரையில இருக்கற தேவையற்ற ஆக்கிரமிப்புகளை எடுக்கணும். தொழிற்சாலைகள் ரசாயனக் கழிவுகளை உய்யகொண்டான் கால்வாய்ல விடக்கூடாது. மனிதக் கழிவிலிருந்து, மாநகரத்தோட அத்தனை கழிவு களின் வடிகாலாதான் இப்போ அது இருக்கு. குறிப்பா கவர்ன்மெண்ட் மருத்துவமனைக்குப் பக்கத்துலதான் உய்யகொண்டான்ல மாசு அதிகம். அங்க ஆரம்பிக்கற மாசு உழவர் சந்தை, ஆழ்வார் தோப்பு வழியா




உழவர் சந்தை பகுதி

பாலக்கரை பகுதி

அதிகரிச்சுக்கிட்டே வந்து இடத்தெரு இருதயபுரம் அரியமங்கலம் வரைக்கும் மாசுக்களோட ஆதிக்கம் நீண்டுக்கிட்டே போகுது. மழைக் காலத்துல சாக்கடைத் தண்ணியால தொந்தரவுன்னா கோடைக் காலத்துல தேங்கி நிக்கற தண்ணியில கொசுக்கள் அதிகமா உற்பத்தியாகி தொந் தரவு பண்ணும். யானைக்கால், மலேரியா இங்க ஜாஸ்தி ஆயிடும். யார் கையில நிர்வாகம் வந்தாலும் உய்யகொண்டானோட உயிர் ஊசலாட்டம் தான்'' என்கிறார்.

**சுத்தமாக என்ன பண்ணணும்?**

''கால்வாயோட கரைகளை உயர்த்திக் கட்டணும். அப்போதான் குப்பைகளைப் போடமாட்டாங்க.

மாநகராட்சிக்குள்ள பிளாஸ்டிக் பைகளைத் தடை பண்ணணும். இதனால் கால்வாயோட நீரோட்டப் பாதையில் எந்தத் தடங்கலும் இருக் காது. மூணு வரு ஷத்துக்கு ஒரு தடவை தூர் வாரு றதை ரெண்டு வருஷத்துக்கு ஒரு முறைன்னு மாத்தணும். கால்வாய் பரா மரிப்புக்குன்னு தனி அமைப்பு வேணும். ஆகாயத் தாமரைகளை அகற்றுவதில் அதிக அக்கறை எடுத்துக்கணும். தொடர்ச்சியான சுகாதாரப் பணியும் கூடவே கண்காணிப்பும் தேவை. எல்லாவற்றுக்கும் மேலாக கூவத் தைச் சுத்தப்படுத்த அரசாங்கம் நிதி ஒதுக்கித் தனிக் கவனம் செலுத்துவதுபோல உய்ய கொண்டான் மீதும் உயிர்ப் பாசம் கொள்ளணும். இல்லைன்னா உய்ய கொண் டான் கூடிய விரைவில் இன்னொரு கூவ மாகி விடும்'' என்கிறார் முஸ்தஃபா.

# உய்யகொண்டான்!

குடியிருப்பு வாசிகள்







ஹாஸ்பிட்டல் பகுதி



''தலைவரே! உஷாரா இருங்க!''

''என்ன ஆச்சு?''

''உங்க மேலே 'பினாமி குவிப்பு' வழக்கு தொடுக்கப் போறாங்களாம்!''

# பினாமிக் குவிப்பு வழக்கு!

அனன்யா

''தினமும் வாயுப் பதார்த்தங்களாகவே சமைக்கறியே ஏன்?''

''நீங்கதானே உங்க அம்மாவுக்குப் 'பிடிக்கிற' மாதிரி தினமும் சமைக்கச் சொன்னீங்க!''

''வாங்க... காபி சாப்பிடறீங்களா?''

''இல்லீங்க; போன தடவை உங்க வீட்டுல காபி சாப்பிட்டதுக்கு அப்புறம், நான் காபி சாப்பிடறதையே விட்டுட்டேன்!''

''தேனிலவுக்குப் போயிட்டு வந்த உடனே உங்க திட்டம் என்ன மேடம்!''

''வேறென்ன... டைவர்ஸுக்கு எழுதிப் போடணும்! அவ்வளவுதான்!''



''எதுக்கு தலைவர் 'மைக்' மேல மிளகாய்ப்பொடியைத் தூவறார்?''

''நல்ல காரசாரமா பேசப் போறாராம்!''



“ஆபரேஷன் முடிஞ்சதுக்கப்புறம் எப்போ என்னை ‘டிஸ்சார்ஜ்’ பண்ணுவீங்க டாக்டர்?”

“உடனே ‘டிஸ்போஸ்’ பண்ணிருவோம்!”



# டிஸ்சார்ஜா... டிஸ்போஸா...!

குட்டி பிரசன்னா

“டாக்டர் ரொம்பப் புழுக்கமா இருக்கு... ஐஸ் கட்டியிலேயே இருக்கணும் போல இருக்கு!”

“அவசரப்படாதீங்க... அதெல்லாம் ஆப்பரேஷனுக்கு அப்புறம்தான்!”

“ஒரு மூணு மூணு... இரு மூணு ஆறு... மும்மூணு ஒன்பது...!”

“அடச்சே! ‘வாய்ப்பாட்டுக் கச்சேரி’ன்னு சொன்னதை நம்பி வந்தது தப்பாப்போச்சே!”



“அந்த நடிகை தன்னோட கணவரை ‘ஒன் நாட் டூ’ன்னு கூப்பிடறாங்களே அவரு கான்ஸ்டபிளா..?”

“ஊஹூம்... அவரு அந்தம்மாவோட 102வது புருஷனாம்!”

“என்னங்க! எதுக்காக இப்படி பேயறைஞ்ச மாதிரி உட்கார்ந்திருக்கீங்க?”

“உண்மைதான் கமலா! ராத்திரி தூக்கத்துல உன் கை என் கன்னத்துல பட்டுருச்சு!”





"இலால்குடி சிவன் கோயிலுக்கு எப்படிப் போகணும்?" - "சப்தரிஷீஸ்வரர் கோயிலா? அப்படிக் கேளுங்க. சிவன் கோயில்னு கேட்காதீங்க" என்று ஒருத்தர் வாய்ச் சண்டைக்கே வந்து விட்டார்! சிவ னருளால் அந்த நபரின் சினம் தணித்து முன் சென்றோம்.



அத்திரி, பிருகு, புலத்தியர், வசிஷ்டர், கௌதமர், ஆங்கீரசர், மருசி அப்படினு ஏழு ரிஷிகள். அவர்கள் மீது, முருகப்பெருமான் சினம் (அது தனிக்கதை) கொண்டு சாபமிடுகிறார். சாபத்திலிருந்து மீள ஏழு ரிஷிகளும் திருத்தவத்துறை (லால்குடி) வந்து கடுந்தவம் புரிகின்றனர். சுயம்பு லிங்க மாகத் தோன்றுகிறார் எம்பெருமான். தனது தலைப்பகுதியினை வெடிக்கச் செய்கிறார். தீப்பிழம்பு தோன்றுகிறது. ஏழு ரிஷிகளையும் அதன் உள் வாங் கிக்கொண்டு, அவர்களுக்கு அருள்புரி கிறார்.

இப்ப, ரொம்ப சிம்பிளுங்க. ஏழுன்னா 'சப்த'னு சொல்வாங்க. ஏழு ரிஷிகளுக்கு அருள்பாலித்த ஈஸ்வரர், சப்தரிஷீஸ்வரர். கருவறையில் வீற்றிருக்கும் லிங்க வடி வத்தின் தலை பாகத்துல வரி வரியாகப் பள்ளம் இப்பவும் இருக்கு. கருவறை நுழை வாயில் அருகே குறிப்பிட்ட ஏழு ரிஷிகளும், மறுபுறம் கண்ணனும் திருமாலும் நம் கண்ணெதிரே காட்சி தர்றாங்க.

நவக்கிரக சன்னிதி இங்கே வித்தி யாசமானது. நவக்கிரகங்கள் ஒன்றையொன்று பார்க்காது என்று கேள்விப்பட்டிருக்கோம். இங்கே அப்படியில்லை. சூரி யனை மையமாக வைத்து மற்ற எட்டு கிரகங்களும், சூரியனைப் பார்த்து நின்னுட்டிருக்கு. நவக் கிரக நாயகன் சூரியன். வைதீக, ஆகம மற்றும் சமப்பிரதிஷ்டைக்கு உட்படாமல் இங்கே தனித்தலமாக அமைந்திருப்பதால், நவக்கிரக தோஷ நிவர்த்தி சன்னிதி இது எனச் சொல்லப்படுகிறது.




நிறைய ஏழு இங்கே இருக்கு. நாகர்கள் ஏழு. கன்னிகள் ஏழு. அவ்வளவு ஏன்? சப்த கணபதிகள்னு விநாயகரும் ஏழு.

மாங்கல்ய மகரிஷிக்கு தனி சன்னிதி. மாங்கல்யத்துக் கும் இந்தக் கோயிலுக்கும் என்ன சம்பந்தம்? ஸ்ரீ லட்சுமி

தேவி கடுந்தவம் இருந்து திருமாலை மணம் புரிந்த தலம். ஈஸ்வரன்தான் அந்தக் கல்யாணத்தை நடத்தி வைக்கிறார். அதனால், இந்தக் கோயில்ல ஈஸ்வரனும் ஈஸ்வரியும் எதிரெதிரே தனித்தனி சன்னிதி கொண்டிருக்காங்க. சப்தரிஷீஸ்வரர் மேற்கு நோக்கி இருக்கார். பெருந்திரு பிராட்டியார் கிழக்கு நோக்கி தனி சன்னிதி. அதுவும் எப்ப பார்த்தாலும் மண மாலையும் கழுத்துமாக திருமணக் கோலத்தில்.

கி.பி.ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஈஸ்வரர் கற்சிலை காணற்கரியது. தட்சிணா மூர்த்தி வீணை வெச்சிருக்கார். ஸ்தல விருட்சம் அரச மரம். இப்ப அது இல்ல. அதனால அரச மர வடிவத்தில் கல் தூணை ஸ்தல விருட்சமா வைச்சிருக்காங்க.

# ஆஹா... ஆருத்ரா!



மார்கழி மாதத்தில் திருவாதிரைப் பெருவிழா. அந்தத் திருநாளுக்கு முன் ஒன்பது நாட்கள் இரவில் நாள்தோறும், நடராஜப் பெருமான் மிகச் சிறந்த அலங்காரங்களுடன் காட்சியளிக்கிறார். இதுக்குனு நடராஜருக்குத் தனி சன்னிதி, நடன மண்டபம். திருவாதிரை நட்சத்திரத்தன்று ஆதிரைப் பெருவிழா. பக்தர்களுக்கு ஆருத்ரா தரிசனம். தமிழகத்தில் சிதம்பரத்துக்கு அடுத்து, ஆதிரைப் பெருவிழா சிறப்பாக நடந்தேறுவது இங்குதான்.

### 'வால்குடி' வந்தது எப்படி?

திருத்தவத்துறை - இதுதான் புராண காலப் பெயர். லட்சுமி தவம் செய்து திருமாலைத் திருமணம் புரிந்த இடம் திருத்தவத்துறை. ஏழு முனிவர்களும் தவம் செய்த இடம். தமிழ் இலக்கியங்களிலும் இப்பெயரே இடம் பெற்றுள்ளது. பின்னர், 'லால்குடி' வந்தது எப்படி? இப்பகுதி மீது படையெடுத்து வந்த மொகலாய மன்னன் மாலிக்காபூர், சிவப்புக் கோபுரத்தைப் பார்த்திருக்கிறான். 'இது என்ன லால்குடி?' எனக் கேட்டுள்ளான். உருது மொழியில் 'லால்' என்றால் சிவப்பு. 'குடி' என்றால் கோபுரம். அந்த மொகலாய மன்னனின் வாயிலிருந்து உதித்த சொற்றொடரே, இந்த ஊருக்குப் பெயராக அமைந்து விட்டது.



கரப்பான் பூச்சிகள், புத்தகப் புழுக்கள்
காப்காவின் அலமாரிக்குள் மட்டுமே
இருக்கிறவரை எனக்கும் பிடித்திருந்தது
நானும், எனது நண்பர்களும் செய்திகளற்று
சில காலம் பூச்சிகளாக இருந்திருந்தோம்.
பிறகுதான் விற்பனைப் பிரதிநிதியாளன்
ஒருவனுடன் ரகசிய ஒப்பந்தம் ஆனது. பிறகு,
என் குழந்தைகள் பூச்சிகளாக உருமாற்றம்
ஆகியிருந்த காலத்தில் வீடெங்கும் அந்த
பூச்சிக்கொல்லி மருந்தின் தூவல் பெய்தது.
ஆவலுடன் வரும் பூச்சிகள், சுவர்ப்பல்லிகள்,
எதுவும் இப்போது அறைக்குள் இல்லை.
துர்வாசனைகள் ஏதும் துர்வாசனைகள் மட்டும்
அல்ல என்று எழுதிக் கொண்டிருக்கிறேன்
என்னை நேசிப்பவர்களுக்கு.

# எதுவும் இப்போது அறைக்குள் இல்லை!



கீதாஞ்சலி பிரியதர்சினி

# தீபு - கோபு










கருத்து: கார்த்தி படம்: கதிர்

"பள்ளிக் காலத்தில் நானும், நண்பன் இராமநாதனும், பின்விளைவுகளைச் சிந்திக்காமல் ஒருவரை நோக்கி ஒருவர் கல்லெறிந்து விளையாடிக் கொண்டிருந்தோம். நான் எறிந்த கல் அவன் தலையில் பட்டு மயங்கி விழுந்துவிட்டான். மருத்துவமனையில் முதலுதவிக்குப் பின் கண் விழித்தவன், 'கால் தடுக்கி விழுந்து அடி பட்டுடுச்சு' என்றான். மறுநாள் என்னைக் காட்டிக் கொடுக்காததன் காரணம் கேட்டபோது, 'நான் எறிஞ்ச கல் உன் மேல பட்டிருந்தா என்னைக் காட்டிக் கொடுத்திருப்பாயா?' என்று கேட்டான். அவன் நட்பின் ஆழத்தையும், மயக்கம் தெளிந்தபின் அவன் காட்டிய நடிப்புத் திறனையும் என்னால் எட்டிக் கூடத் தொட முடியாது"- என்று நெகிழ்ச்சியுடன் நினைவு கூர்பவர் நடிகர் சாருஹாசன். அவர் மலரும் நினைவுகளுக்குள் ஆழக் காரணமானது கமலும் ரஜினியும் கைகோத்து நிற்கும், கல்கி நட்பு ஸ்பெஷல் அட்டைப்படம்தான்!

அந்த இதழில் வாசகர்களுக்கு 'திக் ஃப்ரெண்ட்ஸ்' போட்டி அறிவித்திருந்தோம். இதைப் போன்ற நெகிழ்ச்சியான கடிதங்கள் வந்து கடல் போல் குவிய, முத்து முத்தான கடிதங்களை உங்கள் ஃப்ரெண்ட் 'ஷிப்'புக்குள்ளிருந்து தேர்ந்தெடுத்தோம்.

எத்தனை விதவிதமான நட்புகள்...? சாம்பிளுக்கு சில கடிதங்கள் மற்றும் தலா ரூ.200/- பரிசு பெறுவோர் விவரங்கள் கீழே.

**லாரல் - ஹார்டி ஜோடி!**

*சாந்தா எனக்கு அறிமுகமானது என் குழந்தைகளின் ஆசிரியையாகத்தான். நானும் அதே பள்ளியில் ஆசிரியையாகச் சேர்ந்து, அவள் நட்பையும் பெற்றதோடு அவளிடம் கற்றுக்கொண்டதும் ஏராளம். எங்களின் சிந்தனை, ஆர்வம், ரசனை... ஒரே அலைவரிசையில் அமைந்திருந்தன.*

*அதனாலேயே இனிமையாக ட்யூனானது எங்கள் உறவு. பிறகு எங்கள் உறவினர்கள் ஒருவருக்கொருவர் உறவினர்கள் ஆனது தனிக்கதை. எங்களுக்கு ஒரு செல்லப் பெயர்கூட உண்டு எங்கள் வட்டத்தில். லாரல் - ஹார்டி! சாந்தா - ஒற்றைவாகு, உயரம். நான் - கனத்த சரீரம், நடுத்தர உயரம். இதையெல்லாம் விட இணைபிரியாமல் ஒன்றித் திரிந்தது தான் இந்தச் செல்லப் பெயருக்குக் காரணம்! 17.6.1993 முதல் ஒன்றி வளர்ந்தது எங்கள் நட்பு. 17.8.2009ல் என் தோழி என்னை விட்டும், இவ்வுலகைவிட்டும் பிரிந்தாள். ஆனால் என் நினைவில் என்றும் வாழ்கிறாள்.*

**-ஜெயந்தி வெங்கடேஷ், சென்னை**

❖ வாழ்வை வடிவமைத்தவன்...



ஷிப்புக்குள்

# நாங்களும் திக் ஃப்ரெண்ட்ஸ்!
# போட்டி முடிவுகள்

### வாழ்வை வடிவமைத்தான்!

ஒரு வேளை நான் முழுநேரக் குடிகாரனாகவோ, குற்றவாளியாகவோ உருவாகியிருக்கக் கூடும்; என் நண்பன் வெங்கடேஷ் இல்லாது போயிருந்தால். சில ஆண்டுகளுக்கு முன் தவறான சேர்க்கையால் நான் வழிதவறியபோது என்னை மாற்றி வாழ்க்கைக்குள் வடிவமைத்தவன் அவன். என் உறவினர்களும் பிற நண்பர்களும் என்னை ஒதுக்கினர். வெங்கடேஷ் தான் என்னை அணைத்துக் கொண்டான். பல்வேறு நிகழ்ச்சிகள், சுற்றுலா என என் கவனத்தைத் திருப்பி, தாழ்வு மனப்பான்மையைப் போக்கி தன்னம்பிக்கை கொடுத்து தாயாக நின்றான். தனி மனிதனாக நின்று குடிப்பழக்கத்திலிருந்து என்னை மீட்டான். சொந்தச் செலவில் எனக்கு மணமுடித்து வைத்து மனிதனாக்கினான். இன்று சமூகத்தில் நான் பொறுப்புள்ள குடிமகனாக, நல்ல கணவனாக, அன்பான தந்தையாக வாழ முழு முதற் காரணம் என் இனிய வெங்கடேஷ் தான்.

- எம்.ராஜன்,
மதுரை

### தோழியா? நீ டீச்சரா?

பல ஆண்டுகளுக்கு முன் பேனா நட்பு பகுதியில் என்னுடைய முகவரியைப் பார்த்த கோயம்புத்தூர் தோழி ஒருவர் எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். அதைக் கடிதம் என்பதைவிட வினாத்தாள் என்றால் பொருந்தும். என்னுடன் பழக எண்ணற்ற கட்டளைகள் இட்டிருந்ததோடு, பல கேள்விகளும் கேட்டிருந்தார். அதிர்ச்சியாகவும், ஆச்சர்யமாகவும் இருந்தாலும் பிறகு யோசித்ததில் பெற்றோர்கள், ஆசிரியர்களுக்கேயுரிய அக்கறையும் கண்டிப்பும் அதில் எனக்குத் தென்பட்டன. அவர் என் உயிர்த் தோழியாக ஆன பிறகும் நாங்கள் புகைப்படத்தில் கூடப் பார்த்துக் கொள்ளவில்லை. எனக்குத் திருமணம் நிச்சயமான பின் அவரையும் அவர் குடும்பத்தினரையும் சந்தித்தேன். அதுவே எங்கள் முதல் மற்றும் கடைசி சந்திப்பு. திருமணத்துக்குப்பின் எங்கள் இருவர் வாழ்க்கையும் பாதிக்கப்படக்கூடாது என்ற ஒரே காரணத்துக்காகப் பிரிந்தோம். ஆண் - பெண் நட்பை அவதூறு சொல்லும் பண்பு(!) இன்றளவும் நம்மிடையே இருக்கிறதே!

- முத்து ஆனந்த்,
வேலூர்

♦ லாரல் - ஹார்டி ஜோடி!



### படிங்க சீனியர்... மணி நாலு!

1980 81ல் பாளையங்

முத்து!

* வா என்றால் வருவான்...



* எவர்க்ரீன் சாரு...



கோட்டை தூய சவேரியார் மேனிலைப் பள்ளியில் விடுதியில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தேன். 10ம் வகுப்பு வரை நன்றாகப் படித்த நான் 11ம் வகுப்பில் பின்தங்கத் தொடங்கினேன். என்னை நிழலாகத் தொடர்ந்து தூண்டிக் கொண்டே இருந்த என் ஜூனியர் சுப்பிரமணியன் திடீரெனப் புயலானான். ஒரு நாள் காலை நான்கு மணிக்கு அறைக் கதவு தட்டப்பட்டது. திறந்தால் சுப்பிரமணியன்! 'படிங்க சீனியர், மணி நாலு' கூறி விட்டுப் போனான். தினமும் அவன் இப்படி செய்வதும் நான் மறுபடி தூங்குவதும் வாடிக்கை. 'இவனுக்கு நம் மேல் உள்ள அக்கறை நமக்கே இல்லையே' என்ற சுயபச்சாதாபம் எழுந்தது. பின் முயன்று படித்து பி.எஸ்சி. வேளாண்மை முடித்து இப்போது தோட்டக்கலை உதவி இயக்குநராக உள்ளேன். மருத்துவம் படித்துக் கொண்டிருந்த என் ஜூனியருடன் தொடர்பு விட்டுப்போய்விட்டது. டி.எஸ்.பி. என்று என்னை அன்போடு அழைக்கும் நண்பா... எங்கிருக்கிறாய் இப்போது?

**- தி.சு.பாலசுப்பிரமணியன், புதுக்கோட்டை**

* சாருதான் எனக்கு எவர்க்ரீன் ஃப்ரெண்ட். **- சி.கஸ்ரத், கும்மிடிப்பூண்டி**

* வான்னு கூப்பிட்டா ஏன்னு கேக்காம வந்து நிப்பான் திருநாவுக்கரசு.

**- எஸ். நந்தகுமார், ஆரணி**

* மூணு பேரு மட்டும் போன ஜாலி டூரை மறக்க முடியாது.

**- ஜி.உஷா, ஸ்ரீரங்கம்**

* மியூசிக் டீச்சர் கோர்ஸ் சீட்டை எனக்கு விட்டுத் தர நினைச்ச சரஸ்வதி.

**- கீதா, பெங்களூரு**

* அலமேலுவுடன் என் நட்புக்குப் பாலம் அமைத்தது கல்கி.

**- குமாரி சோமசுந்தரம், சென்னை**

* என்னைக் கைப்பிடித்து வழிநடத்துபவள் மை ஸ்வீட் திவ்யா.

**- ஆர். கவிதா, மதுரை**

* ஜாலி டூர்...



**தேர்ந்தெடுக்கப்பட்ட திக் ஃப்ரெண்ட்ஸுக்கு வாழ்த்துகள்!**

ம்! நாங்களும் **திக் ஃப்ரெண்ட்ஸ்!** நாங்களும் **திக் ஃப்ரெண்ட்ஸ்!** நாங்க

**மேஷம் :** சனி பகவான் 6ம் வீட்டில் சஞ்சாரம் செய்வதால் தொழில், பொருளாதார ரீதியாக முன்னேற்றம் ஏற்படும். என்றாலும் பாக்கிய ஸ்தானத்தில் சூரியன் சஞ்சாரம் செய்வதால் எதிலும் கவனம் தேவை. உடல் நிலையில் உஷார். கூட்டாளிகளை அனுசரித்துச் செல்லவும். குரு 11ம் இடத்தில் நிலவுவதால் தொட்டது எல்லாம் வெற்றிதான்! தெய்வபலம் நிறைந்திருக்கும்.

**ரிஷபம் :** 3ல் செவ்வாயும், 10ல் குருவும் சஞ்சாரம் செய்வதால் அனுகூலம் மிகுந்த பலன்கள் ஏற்படும். சூரியன் 8ம் இடத்தில் சுற்றுவதால் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. எதிலும் எதிர்நீச்சல் போட வேண்டியிருக்கும். பணவரவு பெருகும். வாக்குவாதங்கள் தவிர்க்கவும். படிப்பில் கவனம் தேவை. தொழில், வீடு இடமாற்றம் ஏற்படும். ராகு / கேது / குரு வழிபடுதல் நலம் தரும்.

**மிதுனம் :** 9ல் நிலவும் குருபகவான் சில அற்புதமான காரியங்களைச் செய்து முடிப்பார். பணக்கஷ்டம் தீரும். தந்தை வழி சொத்து வந்து சேரும். உடல் ஆரோக்கியம் மேம்படும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். பணி உயர்வு ஏற்படும். திருமணக் காரியம் நிறைவேறும். மன சஞ்சலம் தீரும். சொத்து வாங்கும் யோகம் கிட்டும். ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**கடகம் :** குரு அஷ்டம ஸ்தானத்திலும், சனி 3ம் இடத்திலும் சஞ்சாரம் செய்வதால் நீண்டகால பிரச்னைகள் முடிவுக்கு வரும். மன தைரியம் மிகுதியாகும். தனவிருத்தி உண்டாகும். உடல்நிலை சீராகும். இல்லற



# நடக்குமென்பார்: நடக்கும்!

வாழ்வு சிறக்கும். நல்ல செய்திகள் வந்து சேரும். தூர தேச அழைப்பு வந்து சேரும். குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**சிம்மம் :** வெற்றிக் கனி கிட்டும் நேரம் இது. எதிரிகள் விலகிச் செல்வர். பண வருவாய் பெருகும். வாகன யோகம் கிட்டும். மனக் குழப்பம் அடியோடு விலகும். உடல் ஆரோக்கியம் சீராகும். தொழில் முன்னேற்றம் ஏற்படும். குழந்தைகள் வழியில் சுபச் செலவு ஏற்படும். தடைப்பட்ட திருமண முயற்சிகள் கைகூடும். உத்தியோக உயர்வு ஏற்படும். பரிகாரம் தேவை இல்லை.

**கன்னி :** குரு 6ம் இடத்திலும், சனி ஜென்ம ராசியிலும் சஞ்சாரம் செய்வது திமர் தன யோகத்தை அளிக்கும். எதிர்பாராத காரியங்கள் நடைபெறும். பண விரயம் குறையும். ஆரோக்கியம் சீராகும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். கடன் தொல்லையிலிருந்து விடுபடுவீர்கள். மன அமைதி ஏற்படும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**துலாம் :** குருபகவான் அனுக்கிரஹம் நன்றாக உள்ளது. பிள்ளைகளைப் பற்றிய மனக்கவலை தீரும். வீட்டில் சுபகாரியப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். சொத்து வாங்கும் யோகம் கிட்டும். வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். ஊதிய உயர்வு ஏற்படும். வியாபார முயற்சி பலன் அளிக்கும். ஆஞ்சநேயர் வழிபாடு ஆரோக்கியத்தை மேன்மைப்படுத்தும்.

**விருச்சிகம் :** எதிலும் நிதானத்தைக் கடைப்பிடிக்க நேரிடும். கூட்டாளிகள் விலகிப் போவர். மன வருத்தம் ஏற்படும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது.

**28.12.2009 முதல் 03.01.2010 வரை**

## தஞ்சை பரத்வாஜ்

வேலைப் பளு அதிகரிக்கும். இடம் மாற்றம் ஏற்படும். சுபநிகழ்ச்சிகள் கூடி வரும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். இல்லற வாழ்வில் விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. ராகு / கேது / குரு வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**தனுசு :** நீண்டகாலப் பிரச்னைக்குத் தீர்வு காணப்படும். கணவன் மனைவியிடையே உறவு மேம்படும். விலகிப் போனவர்கள் விரும்பி வந்து சேர்வர். வேலைப் பளு குறையும். ஆரோக்கியம் மேம்படும். நண்பர் / உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு சங்கடங்களைத் தீர்க்கும்.

**மகரம் :** ரொம்பவும் அற்புதமான வாரம். தொட்டது துலங்கும். எண்ணங்கள் ஈடேறும். வழக்கு வெற்றி பெறும். திருமண முயற்சிகள் பலன் தரும். கடன் தொல்லை தீரும். தொழில் முயற்சி பலன் தரும். வாக்கு வன்மை மேலோங்கும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். பரிகாரம் தேவை இல்லை.

**கும்பம் :** குடும்ப உறவுகள் மேம்படும். திருமண முயற்சிகள் நிறைவேறும். மன சஞ்சலம் தீரும். வெளிநாடு செல்லும் வாய்ப்பு உண்டாகும். பூர்வீகச் சொத்து வந்து சேரும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். மனக் குழப்பம் தீரும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**மீனம் :** குரு மாற்றம், சனி மாற்றம் இடமாற்றத்தை ஏற்படுத்தும். மன சஞ்சலம் தீரும். ஊதிய உயர்வு கிட்டும். நீண்டதூரப் பிரயாணம் வந்து சேரும். கடன் தொல்லை தீரும். புதிய தொழில் முயற்சி பலன் தரும். திருமண முயற்சிகள் கைகூடும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு சங்கடங்களைத் தீர்க்கும்.

● எம்.அசோக்ராஜா, திருச்சி

***புத்தர் மீண்டும் பிறந்தால் எந்த மரத்தின் கீழ் ஞானம் பெறுவார்?***

ஞானத்தை விடுங்கள். புத்தர் நிழல் பெறக்கூட நம் நாட்டில், மரம் இல்லாமல் போய்விடும் போலிருக்கிறதே. முதலில் அசோகர் பிறக்கட்டும். மரம் நடட்டும்... பின் புத்தர் பிறந்து ஞானம் பெறட்டும். மரவுரி இல்லாமல் பூமி நிர்வாணம் ஆகும் நிலையில் இருக்கிறது.

● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

***உங்களுக்கு அசிஸ்டெண்ட் ஆகணும்னா என்ன செய்யணும்?***

தற்போது இருக்கும் என்னுடைய அசிஸ்டெண்ட் வாயால் 'பிரம்மரிஷி' பட்டம் வாங்க வேண்டும்.

● மா.சுந்தரமூர்த்தி, திருவண்ணாமலை

***ஏசு சுமந்த சிலுவையின் எடை என்ன?***

ஏசு சுமந்த சிலுவை லேசு. எப்படி என்கிறீர்களா... பூனே நகரத்தில் முகாமிட்டிருந்தபோது பகவான் ஸ்ரீசத்ய சாயிபாபா அருளிச் செய்தது: ''ஏசுநாதர் சுமந்த சிலுவையே 'நான்' என்ற அகந்தையைக் குறுக்கே கோடு போட்டு அழித்து விடுதலின் குறியீடுதான்.'' நான் அதாவது 'I' இருக்கும்வரையில் இந்தப் புதிருக்கு விடை ஏது? 'I' என்ற ஈகோவைக் குறுக்கே கோடு போட்டு அழித்துவிட்டால் அதற்கு எடை ஏது?

● ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி

***கோபமுள்ள இடத்தில் மட்டும்தான் குணம் இருக்குமா?***

இன்ஃபாக்ட் குணமுள்ள இடத்தில் கோபம் இருக்கும். ராமர் இருக்கும் இடத்தில் லட்சுமணர் இருப்பார்.



● மாதுரி, டெல்லி

***சின்னச் செடி மரமாக வளர்ந்து உயரமாகிறது. இயற்கையில் இதேபோல், உயரமாக இருந்து குள்ளமாவது எது?***

தண்ணீர் உயரத்தில் இருந்து வழுக்கி கீழே அருவியாக வழிந்து தேங்கி 'குட்டை' ஆகும்!

● அ.முரளீதரன், மதுரை

***சிந்தனை, கற்பனை என்ன வேறுபாடு?***

'ஆப்பிள் ஏன் கீழே விழுந்தது?' என்று கற்பனையோடு நியூட்டன் புவிசர்ப்பைக் கண்டுபிடித்தால் சிந்தனை... 'ஆப்பிளுக்குப் பதிலாக நம்ம மேலே அழகான ஈவ் விழுந்தா எப்படி இருக்கும்?' என்று வேறு ஈர்ப்பைச் சிந்தித்தால் அது கற்பனை.

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

***கண்ணீர், அழுகை என்ன வித்தியாசம்?***

கண்ணீர் காரியம்... அழுகை காரணம்... காரணமற்ற அழுகை ஆண்டவன் தொழுகையானால் வருவது ஆனந்தக் கண்ணீர்!

● ஸ்ரீமதி, சென்னை

***கோள் சொல்லலாமா கிரேஸி?***

'ராகுவே, கேதுவே, சனி பகவானே, குருவே' என்று காலையும், மாலையும் 'கோள்' சொல்லுங்'கோள்'... நம்பிக்கை இல்லாவிட்டால் தஞ்சை பரத்வாஜைக் கேளுங்'கோள்'!

# கோள் சொல்லலாமா கிரேஸி?

கிரேஸியைக் கேளுங்கள்

# காவிரி நதிக்கரையில்... காட்டன் புடவை வெள்ளம்!

காட்சி: 1

ஸ்ரீரங்கம் காவிரிக் கரை.

''சீக்கிரமா குளிச்சிட்டு கரைக்கு வாங்க. லேடீஸ் நாங்க சீக்கிரம் குளிச்சிட்டோம். வெரசா வாங்க. மோகினி அலங்காரப் பெருமாளை தரிசனம் பண்ணிட்டு... அப்படியே ஜெயலெக்ஷ்மி காட்டன் ஆடைக் குடிலுக்குக் கட்டாயம் போய் வரணும். வாங்கோண்ணா!''

''எனக்குத் தெரியும். ரொம்ப அலட்டாதே. உனக்கு வேண்டியதை எல்லாம் வாங்கித் தர்றேன். கொஞ்சம் இரு. சூரிய நமஸ்காரம் பண்ணிட்டு வந்துடுறேன்!''

காட்சி: 2

தாயார் சன்னிதியில் மஞ்சுளா:

''ஆமாண்டி கோகிலா... நீ கட்டியிருக்கற காட்டன் புடைவை ரொம்ப நன்னா இருக்கே. எங்கேடி வாங்கினே?''

''உன்னோட கண்லயும் அது பட்டிடுச்சா? எல்லாம் நம்ம ஸ்ரீரங்கம் ஜெயலெக்ஷ்மி காட்டன் ஆடைக் குடில்லதாண்டி மஞ்சு. அங்கே எல்லா வயசுக்கும் ஏத்த மாதிரி காட்டன் ஆடைகள் வெள்ளமா நிரம்பி வழியுது!''

காட்சி: 3

நியூஜெர்சியிலிருந்து ஜெயந்தி:

''பவித்ரா நாந்தாண்டி ஜெயந்தி பேசறேன். ஸ்ரீரங்கத்துல உன் அப்பா வீட்டுக்குப் போய்ட்டு அப்படியே எனக்கு ஜெயலெக்ஷ்மியில இரண்டு அல்லது மூணு Thermal Wear வாங்கிட்டு வா. நீதான் அடுத்த மாசம் நியூஜெர்சி வர்றேன்னு சொல்லியிருந்தியே!''

''சொல்றேன்னு சண்டைக்கு வந்துடாதே. நான் உன்னை மறந்தாலும் மறப்பேனே தவிர, நம்ம ஜெயலெக்ஷ்மிய மறந்துட மாட்டேன். ஏன்னா, சென்னை, கோவை, மதுரை போன்ற மாநகரங்கள்ல மட்டுமே கெடைக்கக்கூடிய எல்லாவகை ட்ரெஸ் மெட்டீரியலையும் நம்ம ஊருக்குக் கொண்டு வந்தவங்க ஆச்சே!''

காட்சி: 4

''இதனால சகலமானவர்களுக்கும் சொல்லிக்கறது என்னன்னா... தாய்மார்களுக்கு ஏத்த ஃபீடிங் நைட்டி, புதுமணப் பெண்ணுக்கு ப்ரைடல் கலெக்ஷன்ஸ், மங்கையர் விரும்பும் குந்தன் மற்றும் ஆர்ட்டிஃபிஷியல் ஆன்டிக் நகைகள், பாரம்பரிய ரசனையுடன் கூடிய ஸில்க் காட்டன் மற்றும் ஸில்க்



* நீண்டநாள் வாடிக்கையாளர் தம்பதி: அகிலா, ஹரிஹரன்




# மனதுக்கு இதமான காட்டன் புடைவைகளின் கலங்கரை விளக்கம் ஜெயலெக்ஷ்மி காட்டன் ஆடை குடில்!

சேலைகள், மனசுக்கு இதமான சுடிதார் மற்றும் உள்ளாடைகள், மங்கை மற்றும் ஐஸ்வர்யா நைட்டீஸ், ரெவ்லான் மற்றும் லக்மே அழகு சாதனப் பொருட்கள், ஆண்களுக்கான ரெடிமேட் ஆடைகள், ஹேன்ஸ், ஜாக்கி போன்ற உள்ளாடைகள் மற்றும் டீ-ஷர்ட்கள் அனைத்தும் ஒருங்கே கிடைக்கக்கூடிய ஒரே இடம் ஜெயலெக்ஷ்மி காட்டன் ஆடைக் குடில்!''

ஜெயலெக்ஷ்மி காட்டன்
ஆடைகுடில்
ஆதவா காம்ப்ளெக்ஸ்,
(இராஜகோபுரம் எதிரே)
ஸ்ரீரங்கம்,
திருச்சி - 620006
தொலைபேசி:
0431-2430972, 6506863

கல்கி ஷோகேஸ்

* ஜெயந்தி கிருஷ்ணன்







● கட்கரி

# ஆர்.எஸ்.எஸ்.

கடந்த சில மாதங்களாகவே ராஜ்நாத்சிங் பதவி ஆட்டம் கண்டு வந்தது. தலைவராக இருந்தாரே தவிர கட்சி அவரது வழி காட்டுதலில் இல்லை. தலைக்குத் தலை தனி ராஜ்யம் நடத்திக் கொண்டிருந்தார்கள். 2009 பாராளு மன்றத் தேர்தலில் வெற்றி பெற்ற இடங்கள் 138 ஆகச் சரிய, இது தான் சரியான சமயம் என்று ஆர்.எஸ்.எஸ். வேறு தலைவரைத் தேடத் துவங்கியது. அதன் தலை வர் மோகன் பகவத் மிக வெளிப் படையாகவே, ''இந்தமுறை தலைவர் தில்லிக்கு வெளியில் இருந்துதான்'' என்றும், ''அப்படி வரும் தலைவருக்கு 60 வயதுக்குள் இருக்க வேண்டும்'' என்றும் சொல்லிவிட்டார். அவரது தேடு தலில் கிடைத்தவர்தான் 52 வய தான நிதின் கட்கரி. பாரதிய ஜனதா கட்சியின் ஒன்பதாவது தலைவர் நிதின் கட்கரி. கட்சியின் பின்புல மான ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தின் ஸ்தாபகர் டாக்டர் கே.பி.ஹெட்கே வரைப் போலவே இவரும் மராட்டியத்தைச் சேர்ந்தவர்.

கட்கரியும் ஆர்.எஸ்.எஸ்.ஸால் போடப்பட்டு பா.ஜ.க.வில் தமக் கென ஓர் இடத்தை மாநில அள வில் பிடித்தவர். சிவசேனை கூட் டணி அரசில் பொதுப்பணித் துறை அமைச்சராக இருந்தபோது மும்பை நகரில் போக்குவரத்து நெருக்கடி யைக் குறைக்க 55 பாலங்கள், இவரது முயற் சியால் உருவானவை. நாக்பூர் நகரில் மட்டும் இரண்டே வருடங்களில் நாற்பது லட்சம் மரங்களை நட்டு பிரமிக்க வைத்திருக்கிறார். சாலைகள் மற்றும் போக்குவரத்தில் இவர் காட்டிய ஆர்வம் கண்டு, வாஜ்பாய் அரசு இவரை தேசிய ஊரக சாலை வளர்ச்சிக் குழுவின் தலைவராக நியமித்தது. 'பிரதமரின் கிராமப்புற சாலைகள் திட்டத்தை' நாடு முழுவதும் அமுல்படுத்த முக்கியக் காரண மாக இருந்தவர். எனினும், இவர் மீதும் ஒரு கரும்புள்ளி உண்டு. கடந்த மே மாதத்தில் நாக்பூரில் உள்ள இவரது வீட்டில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த கார் டிக்கியில் ஏழு வயது சிறுமி யோகிதா தாக்கரேயின் உடல் கிடந்தது. கற்பழித்து கொலை செய்யப்பட்டிருக்கலாம் என்று பெரிய சர்ச்சை எழுந்தது. மேலும்

காவல்துறை இது தொடர்பாக கட்கரியை விசாரிக்காதது கூடுதல் சந்தேகத்தை ஏற்படுத்தியது.

மத்தியில் ஆட்சிப் பொறுப்பை 2004ல் இழந்தாலும் ஆறு மாநிலங்களில் தனித்தும், இரண்டு மாநிலங்களில் கூட்டணியோடும் ஆட்சி நடத்திக் கொண்டிருக்கும் பா.ஜ.க.வைக் குறைத்து மதிப்பிட முடியாது. ஆனால், அதற்குப் போதாத காலம் மிதவாத தலைவராக முகம் காட்டிக் கொண்டிருந்த வாஜ்பாய், உடல்நலமில்லாமல் முடங்கிவிட்டார். அத்வானிக்கு வயதாகிவிட்டது. அறுபது வருடங்களுக்கு முன் இறந்துபோன ஜின்னா இன்றும் பா.ஜ.க. சர்ச்சைகளுக்குக் காரணமாவது விசித்திரம். இப்போது அந்த அடிப்படையில் ஜஸ்வந்த்சிங் ஓரம் கட்டப்பட்டார். இரண்டாம் கட்டத் தலைவர்களிடையே ஈகோ மோதல்கள். அருண்ஜெட்லிக்கும், ராஜ்நாத்துக்கும் தொடர்ந்த சண்டை, ஒழுங்கீனத்தைக் கட்சியில் விதைத்துவிட்டது. கர்நாடகத்தில் ஆட்சியைப் பிடிக்க வேண்டுமென்ற அவசர அலங்கோலத்தில், பெல்லாரி ரெட்டி சகோதரர்களுக்குக் கட்சியில் முக்கியத்துவம் கொடுத்தது பா.ஜ.க.வின் பெயரை நாறடித்தது. கண்ணீர் விட்டார் முதல்வர் எடியூரப்பா. கட்சிக்கு ஆர்.எஸ்.எஸ்., பலம் என்றாலும் ஒரு வகையில் பலவீனமும்கூட.





# ஆசியுடன்...!

"வளர்ச்சி அரசியலே எனது குறிக்கோள்" என்று சொல்லியிருக்கிறார் கட்கரி. இந்துத்வா, ராமஜன்மபூமி ஆகியவற்றைக் கொஞ்சம் ஒதுக்கி வைத்து ஆக்கபூர்வமான செயல் திட்டங்களோடு கட்கரியை ஒரு மிதவாதத் தலைவராகக் களத்தில் வலம்வரச் செய்வதே ஆர்.எஸ்.எஸ். திட்டம் என்கிறார் கருத்து களம் பத்திரிகையின் ஆசிரியரும், அரசியல் விமர்சகருமான தங்கதுரை. இனி எந்த ஒரு கட்சியும், மத்தியில் தனித்து ஆட்சியைப் பிடிக்க முடியாது. இந்துத்வா முகத்தைத் தீவிரமாகக் காட்டினால் கூட்டணியில் கட்சிகள் சேராது. ஏற்கெனவே ஒரிஸ்ஸாவில் நவீன் பட்நாயக் பா.ஜ.க.வுக்கு பை சொல்லிவிட்டார்.

ஆர்.எஸ்.எஸ்ஸில் ஒரு சிலர் மோடியைத் தலைவராக்க வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார்கள். அப்படி நடந்திருந்தால் பீஹாரில் நிதிஷ்குமாரும் தொடர்பைத் துண்டித்திருப்பார். "பா.ஜ.க. ஒன்றைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். தொலைநோக்கில் பார்த்தால் பொருளாதார, வறுமை ஒழிப்புத் திட்டங்களின் மூலமே பெரும்பான்மை மக்களைக் கவர முடியுமே தவிர இந்துத்வா மற்றும் ராமஜன்ம பூமி கோஷங்களால் அல்ல. இவர்களால் இந்துக்களிடம் உள்ள தீண்டாமை மனப்பான்மையைக்கூட ஒழிக்க முடியவில்லை. யதார்த்தத்தைப் புரிந்துகொண்டு நடந்தால் நிதின் கட்கரி பா.ஜ.க.வை மத்தியில் மீண்டும் அமர்த்த முடியும்" என்கிறார் தங்கதுரை. – **ப்ரியன்**



திருச்சி மாவட்ட ஸ்பெஷல்

# அன்பில்... அன்பில்!

கண்ணுல பூ விழுந்திருக்கு. என்ன செய்யறதுன்னு தெரியலை. பொழுது சாய்ஞ்சா பார்வை மங்கலா இருக்கு. அந்தி மாலைதானே. அதுக்கும் என்ன பண்றதுன்னு ஒண்ணும் புரியலை. "உனக்கு ஏதும் தெரியவும் வேணாம்; எதுவும் புரி யவும் வேணாம். பேசாம நம்ம அன்பில் மாரி யம்மன் கோயிலுக்குப் போய்ட்டு வா. போய்... கண்ணடக்கம் வாங்கிப் போடச் சொல்றியா?

அட... போக்கத்தவளே! சொல்றதைக் கேளுடி. அங்கே போயி அம்மனை வேண்டிக்கோ. ஏதோ பச்சிலை (பெயர் மட்டும் சொல்ல மாட்டாங்க) சாறு பிழிஞ்சு கண்ல விடுவாங்க. அப்படி மூணு வேளை சாறு விட்டுக் கிட்டேன்னு வை, கண் நோவு சம்பந்தப்பட்ட பிரச்னை அத்தனையும் காணாமல் போயிடுது. எல்லாம் அந்த அன்பில் மகா மாரியம்மன் அருள்தான்'' என்று கரம் குவிக்கின்றனர் ஏரியாவாசிகள்.

வெள்ளி, செவ்வாய், ஞாயிற்று கிழமைகளில் காலை பத்து மணி முதல் மதியம் ஒரு மணி வரை, கண் நோய் சார்ந்த பக்தர்களுக்கு பச்சிலைச் சாறு கண்களில் ஊற்றப் படுகிறது. கோயில் பூசாரி, இதற்கென தனியே இருக்கிறார்.

கதை வடிவிலான எட்டுக் கை மாரியம்மன் அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கிறாள். சமயபுரம் மாரியம்மன் பூச்சொரிதல் போலவே, அன்பில் பூச்சொரிதலும் சற்று பிரபலம். பங்குனி மாத முதல் ஞாயிறு, முதல் பூச்சொரிதல். கடைசி ஞாயிறு குதிரை வாகனப் புறப்பாடு. அதனைத் தொடர்ந்து வரும் செவ்வாய்க் கிழமை அன்று திருத்தேர். சுமார் ஐம்ப தாயிரம் பக்தர்கள் கூடுகிறார்கள். ''சமயபுரம் மாரியம்மனுக்கு அக்கா, அன்பில் மகா மாரியம்மன்'' எனக் குறிப்பிடுகிறார் கோயிலின் அர்ச்சகர் அப்பாதுரை குருக்கள்.

# கல்கி

வழங்கும்

திருச்சி மாவட்ட

# சிறப்புப் புதிர் போட்டி-1

எதையும் பெஸ்ட்டா செலக்ட் பண்ணும் திருச்சி மாவட்டவாசிகளே... வாசகர்களே இதோ... உங்களுக்கே உங்களுக்காக, கல்கி வழங்கும் சிறப்புப் புதிர் போட்டிகள். கேள்விகள் அனைத்தும் உங்கள் மாவட்டத்தைச் சுற்றியே பின்னப்பட்டிருக்கின்றன. அப்ப, பதிலும் அங்கேதானே இருக்கும். கீழே உள்ள பதினான்கு குறிப்புகளுக்குமான விடையை அதற்குரிய கட்டங்களில் (ஒரு கட்டத்துக்கு ஒரு எழுத்து என்கிற வகையில்) நிரப்புங்கள். பிறகு வட்டங்களுக்குள் உள்ள எழுத்துகளை மட்டும் இணைத்தால் திருச்சி மாவட்டத்திலுள்ள இரு அற்புதங்களை இனம் காணலாம். கண்டுபிடியுங்கள்.

1 ☐☐◯☐☐☐

2 ☐◯☐☐☐☐☐

3 ☐◯

4 ☐◯

5 ☐◯☐☐☐

6 ☐☐◯☐☐

7 ◯☐☐☐

8 ☐☐◯

9 ☐☐◯☐☐

10 ◯☐☐☐☐☐

11 ☐☐☐☐◯☐

12 ☐☐◯

13 ☐◯☐

14 ☐☐☐☐☐☐◯

குறிப்புகள்:

1. இவரது பெயரில் அமைந்துள்ளது

விடைகளை இங்கே எழுதவும்

1.

2.

திருச்சி மாவட்ட வாசகர் சந்திப்பு 26.01.2010 விவரங்கள் அடுத்த இதழில்!

ஒரு பல்கலைக்கழகம்.

2. பள்ளிகொண்ட பெருமானின் தலத்தை இப்படியும் அழைப்பதுண்டு.
3. திருச்சியைத் தன் பெயரோடு சேர்த்துக் கொண்டுள்ள தமிழக எம்.பி.
4. இதன் நெற்றியிலுமா வடகலை, தென்கலை சர்ச்சை!
5. காவிரியும் கொள்ளிடமும் பிரியும் சுற்றுலாத்தலம்
6. கல்லணை கட்டிய மன்னன்
7. வாரியார் தொழுத முருகனின் தலம்.
8. திருச்சி மாவட்டத்தில் பிறந்த சி.வி.ராமன் பெற்ற மிக உயர்ந்த விருது
9. துறையூரில் உள்ள பிரபல ஆலயம்........ வெங்கடாஜலபதி கோயில்.
10. திருச்சி என்றவுடன் மனதில் தோன்றும் உயர்ந்த இடம்.
11. உயரமான எம்.பி. - நடிகர் திருச்சிக்காரர்.
12. பஞ்சபூத லிங்கங்களில் திருச்சி மாவட்டத்தில் அருள் புரிவது......... லிங்கம்.
13. திருச்சிக்குப் பெருமை சேர்க்கும் '......... ஹெவி எலக்ட்ரிகல்ஸ்' நிறுவனம்.
14. திருச்சியில் சில காலம் படித்திருக்கிறார் இந்த முன்னாள் குடியரசுத் தலைவர்.

**விதிமுறைகள் :**

* இந்தப் போட்டி திருச்சி மாவட்ட வாசகர்களுக்கு மட்டுமே * திருச்சி மாவட்ட புதிர் போட்டி I என்று முத்திரை உள்ள கூப்பன் மட்டுமே பரிசீலிக்கப்படும் * அடுத்த இதழிலும் புதிர் போட்டி தொடரும்... (திருச்சி மாவட்ட புதிர் போட்டி II என்ற முத்திரையுடன்) * இரண்டு கூப்பன்களையும் கத்தரித்துச் சேர்த்து அனுப்ப வேண்டும். * ஒருவரே, எத்தனை கூப்பன் (திருச்சி மாவட்ட புதிர் போட்டி I + II) வேண்டுமானாலும் அனுப்பலாம். * திருச்சியில் 26.01.10 அன்று நடைபெறும் வாசகர் சந்திப்பில் வாசகர் முன்னிலையிலே சரியான விடை எழுதிய 25 அதிர்ஷ்டசாலிகள் தேர்ந்தெடுக்கப்படுவர். * கடிதங்கள் வர கடைசித் தேதி : 15.01.10 * ஆசிரியர் தீர்ப்பே இறுதி

அனுப்ப வேண்டிய முகவரி :

திருச்சி மாவட்ட புதிர்ப் போட்டி I, கல்கி

47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.

பெயர் : ............................ வயது : ............

விலாசம் : ..........................................

..........................................

தொலைபேசி எண் : ............... ஈ-மெயில் : ...............

திருச்சி மாவட்ட **சிறப்புப் புதிர் போட்டி-2** அடுத்த இதழில்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed t
post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.